# அன்னை வாசகம்

மூன்றும் புத்தகம்




பி. எஸ். செட்டியார்
முன்னைத் தமிழாசிரியர்
தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர் கலாசாலை
சென்னை

**காமன்வெல்த் பப்ளிஷிங் கம்பெனி**
21, அப்பர்சாமி கோயில் தெரு
**மயிலாப்பூர்** : : **சென்னை-4**
பதிப்புரிமை] 1954 [அணா $7\frac{1}{2}$

# முன்னுரை

**அன்னையே** குழந்தைகளின் முதல் ஆசிரியர். ஐயிரு திங்கள் அணி வயிற்றில் தாங்கிப் பெற்றுத் தம் குழந்தையை, **'கண்ணே** மணியே கற்கண்டே' என்று கொஞ்சிக் குலவி வளர்க்கும் தாயிடமே குழந்தைகள் முதலில் சொற்களைப் பயிலுகின்றன. எனவே, வீடும் ஒரு பாடசாலையாகவே விளங்குகின்றது.

**'அன்னை வாசகம்'** என்னும் இந் நூல் வரிசையில் அரசியலார் பாடத் திட்டத்தின் நோக்கம் சிறிதும் வழுவா வண்ணம் பாடங்கள் அனைத்தும் கூர்ந்து நினைந்து எழுதப்பட்டுள்ளன.

அரசியலார் பாடப் புத்தகங்களில் சேர்க்கவேண்டிய செய்திகளைக் குறித்து அண்மையில் வெளியிட்டுள்ள குறிப்பு நூலின்படி (Guide Book) பாடங்கள் வகுக்கப்பட்டுள்ளன. தற்காலக் குழந்தைகளே வருங்காலத் தலைவர்கள். அவர்களுக்கு அருங் குணங்களைப் புகட்டும் சிறந்த செய்திகள் பலப் பல இந் நூல் வரிசையில் இடம் பெற்றிருக்கின்றன.

இந் நூல் வரிசையின் நடையும், சொற்களும் வாக்கிய அமைப்பும் மாணவர்கள் தாமே மீண்டும் மீண்டும் படிக்க வேண்டும் என்னும் ஆசையை ஊட்டக் கூடியனவாய் அமைந்திருக்கக் காணலாம். இதில் சேர்த்துள்ள இனிய பாடல்கள் குழந்தைகளுக்கு இன்ப விருந்தாகும். மாணவர்கள் பிழையின்றிப் பேசவும் எழுதவும் வேண்டிய சிறந்த பயிற்சிகளும், பற்பல பட விளக்கங்களும் இந் நூல் வரிசையில் சேர்க்கப் பட்டுள்ளன.

இந் நூல் வரிசையைத் தயாரிப்பதில் எனக்குப் பேருதவி புரிந்த புலவர். திரு. **தணிகை உலகநாதன்** அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியதாகும். தங்கள் பாடல்களைச் சேர்த்துக் கொள்ள உரிமை யளித்த கவிஞர்களுக்கும் என் ஆழ்ந்த நன்றியை அறிவிக்கிறேன்.

தமிழ் நாட்டுக் குழந்தைகளின் மொழி வளம் கருதி வெளியிடப் பெறும் இந் நூல் வரிசையினை ஆதரித்தருளுமாறு கல்வி நலத்தில் கருத்துடைய பெருமக்களை வேண்டுகின்றேன்.

—**ஆசிரியர்**

# பொருள் அடக்கம்

# அன்னை வாசகம்

---

## மூன்றும் புத்தகம்




## 1. நல்ல பையன்

என் பெயர் முத்து. என் வயது ஏழு. நான் மூன்றும் வகுப்பில் படிக்கிறேன். படிப்பில் எனக்கு விருப்பம் அதிகம்.

தினமும் நான் காலையில் ஆறு மணிக்கு எழுந்திருப்பேன். கை கால்களைச் சுத்தம் செய்து கொள்வேன். நான் என் பாடங்களைப்

படிப்பேன்; உணவு உண்பேன்; பின்னர் பள்ளிக்கூடத்துக்குப் போவேன்.

பள்ளிக்கூடத்தில் பாடங்களை நன்ருகப் படிப்பேன். எங்கள் ஆசிரியர் எங்களிடம் அன்பாக இருக்கிருர். நான் எல்லோரிடமும் அன்பாக இருக்கிறேன்.

நான் மாலையில் வீட்டுக்கு வருவேன். மாலையில் எங்கள் தோட்டத்தில் ஓடி ஆடி விளையாடுவேன். என்னுடன் என் அண்ணனும் அக்காளும் விளையாடுவார்கள். வீட்டில் நான் என் பெற்ருேர் பேச்சைக் கேட்டு நடப்பேன்.

நான் இரவில் பாடங்களைப் படிப்பேன்; பிறகு சாப்பிடுவேன். என் தாயார் எனக்குக் கதைகள் சொல்லுவார். கதை கேட்பதில் எனக்கு மிகுந்த ஆசை உண்டு. இரவு எட்டு மணிக்கு நான் படுத்துத் தூங்குவேன். காலையில் எழுந்து கடவுளை வணங்குவேன்.

சொற்கள்

| | | |
|---|---|---|
| விருப்பம் | காலை | பின்னர் |
| தினமும் | அன்பாக | உணவு |
| ஆசிரியர் | பெற்ருேர் | வணங்குவேன் |

## பயிற்சி

**I. விடை கூறு :**

1. முத்து எந்த வகுப்பில் படிக்கிறன் ?
2. நீ எந்த வகுப்பில் படிக்கிருய் ?
3. முத்து காலேயில் என்ன செய்வான் ?
4. மாலேயில் முத்து என்ன செய்வான் ?

**II. எதிர்ப்பதங்களேச் சரியானபடி பொருத்திக் கூறு :**

| | |
|---|---|
| 1. காலே | விழிப்பேன் |
| 2. விருப்பம் | பகல் |
| 3. இரவு | மாலே |
| 4. அதிகம் | வெறுப்பு |
| 5. தூங்குவேன் | குறைவு |

**III. கோடிட்ட இடங்களில் தகுந்த பதங்களேச் சேர்த்து எழுது :**

1. முத்து————தூங்குவான்.
2. காலேயில் எழுந்து கடவுளே————.
3. அவன் எல்லோரிடமும்————இருப்பான்.

———

# 2. எங்கள் தம்பி



தம்பி என்ன என்ன செய்கிருன் ?

# எங்கள் தம்பி

---

பாட்டு

சின்னச் சின்ன பொம்மைபோல்
சீனுக்கார பொம்மைபோல்
என்னைக் கண்டால் சிரிக்கிறான்
எங்கள் தம்பி பாருங்கள். 1

அம்மா அருகில் கொஞ்சுவார்
அப்பா வந்து கெஞ்சுவார்
சும்மா சும்மா சிரிக்கிறான்
சொகுசுத் தம்பி பாருங்கள். 2

தங்கம் போல மேனியாம்
தாம ரைக்கை கால்களாம்
பொங்கி வழிந்து சிரிக்கிறான்
புதுமைத் தம்பி பாருங்கள். 3

— புலவர் தணிகை. உலகநாதன்

# 3. ஊமை நண்பர்கள்

நாம் நமது வீடுகளில் சில பிராணிகளை வளர்க்கிறோம். நாய், பூனை, பசு, குதிரை முதலியவை வீட்டுப் பிராணிகள். இவைகளை நாம் அன்பாக வளர்க்கிறோம். இவை நம்மிடம் அன்பாக இருக்கின்றன. பிராணிகள் நம்மிடம் பேசுவது இல்லை. இவை நமக்கு உதவி செய்கின்றன. ஆகையால் இவைகளை நமது ஊமை நண்பர்கள் என்று கூறலாம்.

நாய் வீட்டைக் காக்கும். நாய் நன்றியறிவுள்ள பிராணி. இது மோப்பம் பிடிக்கும் குணம் உடையது. இது திருடனைக் கண்டால் குரைக்கும். நாய்க்குச் சந்தோஷம் வந்தால் வாலை ஆட்டும்; கோபம் வந்தால் பல்லைக் காட்டி உறுமும். நாய் நம்மை ஆபத்தில் காப்பாற்றும்.



பூனை சுத்தமான பிராணி. இதற்கு இரவில் கண் நன்றாகத் தெரியும். இரவில் இது எலிகளைப் பிடிக்கும். பூனை பால் குடிக்கும்.

இது சோறு, மாமிசம் முதலியவைகளையும் தின்னும். பூனைகள் பல வித நிறமாக இருப்பதைக் காணலாம்.



பசு மிகவும் சாதுவான பிராணி. பசுவுக்குக் கொம்புகள் உண்டு. பசுமாடுகள் பல நிறம் உள்ளவை. பசு பால் தரும். பால் உடம்புக்கு நல்லது. பால் குடிப்பதற்கு இனிமையாக இருக்கும். பசு புல், வைக்கோல் முதலியவைகளைத் தின்னும். மாட்டின் குளம்புகள் பிளவு பட்டிருக்கும். பசுவின் கன்று



துள்ளி ஓடும். பசு தன் கன்றுக்குட்டியிடம் அன்பாக இருக்கும். நீ பசுவிடம் அன்பாய் இரு.



குதிரை கம்பீரமான பிராணி. இது வண்டி இழுக்கவும் சவாரி செய்யவும் உதவும்.

குதிரைக்குக் கொம்புகள் இல்லை. சில நாடுகளில் குதிரைகளை ஏரில் பூட்டி ஓட்டுவதும் வழக்கம். குதிரை வேகமாக ஓடும். குதிரையின் குளம்புகள் பிளவுபட்டு இரா. குதிரை புல்லும் கொள்ளும் தின்னும்.

### சொற்கள்

| | | |
|---|---|---|
| பிராணி | மோப்பம் | கம்பீரமான |
| முதலியவை | உறுமும் | சவாரி |
| அன்பாக | சாதுவான | பிளவுபட்டு |
| உதவி | இனிமை | ஏர் |

### பயிற்சி

I. **விடை கூறு :**

1. வீட்டில் வளர்க்கும் பிராணிகள் நான்கு கூறு.
2. எலிக்குப் பகை எது?
3. பசுவால் உண்டாகும் நன்மைகள் யாவை?
4. பசு கன்றுக்குட்டியிடம் எப்படி இருக்கும் ?
5. குதிரையின் உபயோகம் யாது?

II. **கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை எழுது :**

1. ———— சாதுவான பிராணி. (குதிரை, பசு, நாய்.)
2. எஜமானைக் கண்டால்———— வாலை ஆட்டும். (பூனை, கழுதை, நாய்.)
3. ———— கம்பீரமான மிருகம். (நாய், குதிரை, எருது.)

III. **எதிர்ப்பதம் கூறு :**

இல்லை, கோபம், இனிமை, வேகமாக, நல்லது.



# 4. சைக்கிள் வண்டி



சிங்கார மானவண்டி,
சீமையிலே செய்தவண்டி.
இரும்பாலே செய்தவண்டி ;
எங்கெங்கும் ஓடும்வண்டி.
மாடில்லை குதிரையில்லை ;
மாயமதாய்ப் பறந்திடும்பார் !
தீயில்லை ; புகையுமில்லை ;
தீவிரமாய்ச் சென்றிடும்பார் !
காலாலே மிதிப்பதனுல்
கடும்விசையில் போயிடும்பார் !
ஒன்றன்பின் ஒன்ருக
உருளும்பை தாக்களைப்பார் !
அக்காளும் தங்கையும்போல்
அவைபோகும் அழகைப்பார் !

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

### பொருள் விளக்கம்

பைதாக்கள்—சக்கரங்கள்



# 5. சட்டையும் முட்டையும்

ஒரு வயலில் ஒரு குடியானவன் வேலை செய்து வந்தான். அவன் தன் சட்டையைக் குடிசையில் மாட்டி இருந்தான்.

ஒரு நாள் ஒரு குருவி அவன் குடிசைக்கு வந்தது. குருவி தான் குடி யிருப்பதற்காக

இடம் தேடிப் பார்த்தது. எங்கும் வசதியான இடம் கிடைக்கவில்லை. கடைசியில் அது அவன் சட்டைப்பையில் தங்கியது. சில நாள் கழித்து முட்டைகள் இட்டது. முட்டைகளி லிருந்து குருவிக் குஞ்சுகள் தோன்றின. மொத்தம் மூன்று குருவிக் குஞ்சுகள் இருந் தன. அவை யாவும் அந்தப் பையில் சுகமாக வாழ்ந்தன. தாய்க்குருவி வெளியே சென்று தன் குஞ்சுகளுக்கு இரை கொண்டு வந்து கொடுக்கும்.

ஒரு நாள் குருவி வெளியே சென்றது. அப்போது மழை 'சோ' என்று பெய்தது. குளிரும் அதிகமாக இருந்தது. குடியானவன் தன் சட்டையைப் போட்டுக்கொள்ள விரும்பினான். குடிசையில் மாட்டி இருந்த சட்டையை எடுத்தான்.

சட்டைப்பையில் இருந்த குருவிக் குஞ்சு கள் 'கீச் கீச்' என்று கத்தின. அதற்குள் தாய்க் குருவியும் அங்கு வந்தது. அது மரத் தின் மேலிருந்து கொண்டே அழுதது.

குருவி அழுவதைக் கேட்ட குடியானவன் அந்தச் சட்டையைக் குடிசையிலேயே மாட்டி

விட்டான். அவன் குருவியைப் பார்த்து, "குருவியே! குருவியே! இந்தச் சட்டையை உனக்கே கொடுத்துவிட்டேன். நீயும் உன் குஞ்சுகளும் சட்டைப்பையிலேயே சுகமாக வசிக்கலாம்" என்று கூறினான்.

குருவி கீழே வந்து பழையபடியே சட்டைப் பையில் வசித்து வந்தது. குருவிக் குஞ்சு களுக்கு இறக்கைகள் நன்ருக முளைத்தன. அவை வெளியே பறக்கக் கற்றுக்கொண்டன.

மற்ருெரு நாள் குடியானவன் தன் சட்டையை எடுத்தான். அதில் அவன் குருவிக் குஞ்சுகளைக் காணவில்லை. அவை தம் தாய்க் குருவியுடன் வேருெரு இடத்துக்குப் பறந்து போய்விட்டன. ஆனல் குடியானவன் சட்டைப் பையில் ஒரு தங்க மோதிரம் இருந்தது. அவன் அதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான்.

மோதிரம் அவனுக்கு எப்படிக் கிடைத் தது? இதனுல் அறியும் நீதியைக் கூறு.

சொற்கள்

| | | |
|---|---|---|
| வயலில் | குடிசை | முளைத்தன |
| இட்டது | வசிக்கலாம் | மற்ருெரு |
| தோன்றின | பெய்தது | வேருெரு |
| மகிழ்ச்சி | நீதியை | அறியும் |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. குடியானவன் தன் சட்டையை எங்கே மாட்டி வைத்தான் ?
2. குருவி என்ன செய்தது ?
3. குடியானவன் ஏன் தன் சட்டையை எடுத்தான் ?
4. குருவிக் குஞ்சுகள் என்ன செய்தன ?
5. குடியானவன் தன் சட்டையை ஏன் போட்டுக் கொள்ளவில்லை ?
6. அவனுக்குக் கிடைத்த வெகுமதி என்ன ?

II. 1. **குடியானவன்** தன் **சட்டை**யைக் **குடிசை**யில் மாட்டி வைத்தான்.

இவ்வாக்கியத்தில் **குடியானவன்** என்பது மனிதன் பெயரையும், **சட்டை** என்பது ஆடையின் பெயரையும், **குடிசை** என்பது இடத்தின் பெயரையும் காட்டுகின்றன. இவை பெயரைக் காட்டுவதனுல் **பெயர்ச் சொற்கள்** எனப்படும். ஒன்றின் பெயரைக் குறிப்பது பெயர்ச்சொல் ஆகும்.

2. **கீழ் வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச் சொற்களை எடுத்து எழுது :**

(1) பசு சாதுவான பிராணி.

(2) கண்ணன் எங்கே போனுன் ?

(3) சட்டைப்பையில் ஒரு மோதிரம் இருந்தது.

(4) பூனை எலியைப் பிடிக்கும்.

III. **கீழ் வரும் வாக்கியங்களில் இடம் மாறி இருக்கும் பதங்களை ஒழுங்குபடுத்தி எழுது :**

1. பிராணி, நாய், நன்றியுள்ள.
2. குருவிகள், வாழ்ந்தன, சுகமாக, பையில்.
3. எங்கள், சிறியது, மிகவும், ஊர்.
4. தண்ணீர், இருக்கிறது, கிணற்றில்.
5. புத்தகத்தை, திறந்து, பெட்டியை, எடுத்தான்.

---



## 6. அம்மா என் தெய்வம்

அம்மா அம்மா வருவாயே
அன்பாய் முத்தம் தருவாயே
அம்மா உன்னைக் கண்டாலே
அழுகை ஓடிப் போய்விடுமே. 1

அழகு மிக்க சந்திரனை
ஆகா யத்தில் காண்பித்தே
பழமும் பாலும் ஊட்டிடுவாய்
பாட்டும் கதையும் கூறிடுவாய். 2

தமிழைக் கற்றுத் தந்திடுவாய்
தத்துப் பித்தெனப் பேசிடினும்
அமுதம் அமுதம் என்றிடுவாய்
அணைத்து முத்தம் தந்திடுவாய். 3

உன்னைப் போல வளர்த்திடுவார்
உலகில் உண்டோ வேறொருவர்?
என்னைக் காக்கும் அம்மாவே
எனக்குத் தெய்வம் நீதானே. 4

— குழந்தைக் கவிஞர். அழ. வள்ளியப்பா

## சொற்கள்

| | | |
|---|---|---|
| முத்தம் | சந்திரனை | ஊட்டிடுவாய் |
| அமுகை | பழம் | அமுதம் |
| அழகு | பாட்டு | தெய்வம் |

## பயிற்சி

உன் தாய் உனக்குச் செய்யும் உதவிகள் யாவை?

———

# 7. படம் பார்த்துக் கதை சொல்





# 8. எறும்புகள்

எறும்புகள் மிகவும் சிறியவை. அவை மிகவும் சுறுசுறுப்பானவை. அவை ஒன்றன் பின் ஒன்ருகச் செல்லும். எறும்புகள் சாரை சாரையாய்ச் செல்வது பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும்.

ஓர் எறும்பு ஏதாவது ஒரு சிறு தின்பண்டத்தைப் பார்த்துவிட்டால் அது மற்ற எறும்புகளையும் அழைத்துச் செல்லும். எறும்பு கள் இரையைத் தம் புற்றில் சேர்த்துவைக்கும்.

எறும்புகள் கோடைக்காலத்தில் ஓயாமல் உழைக்கும். அவை மழைக்காலத்தில், சேர்த்துவைத்த பொருளை உண்ணும்.

நாம் தின்பண்டத்தை எங்கே ஒளித்து வைத்தாலும் எறும்புகள் அங்கே வந்துவிடும். வெல்லத்தைக் கண்டால் எறும்புகளுக்குக் கொண்டாட்டம். அவை அரிசி, கடலை முதலியவைகளையும் தின்னும்.

**எறும்புகள் எப்போதும் ஒற்றுமையாகவே இருக்கும். நாமும் ஒற்றுமையாக இருப்போம். ஒற்றுமையால் நன்மைகள் பலவும் அடையலாம்.**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| மிகவும் | அழைத்து | ஒளித்து |
| சுறுசுறுப்பான | சேர்த்துவை | வெல்லத்தை |
| சாரை சாரையாய் | புற்றில் | கோடைக்காலத்தில் |
| ஏதாவது | தின்பண்டத்தை | மழைக்காலத்தில் |

**பயிற்சி**

I. **விடை கூறு :**

1. எறும்புகள் எவ்வாறு செல்லும் ?
2. ஏதாவது ஒரு தின்பண்டத்தைக் கண்டால் எறும்பு என்ன செய்யும் ?
3. எறும்புகள் என்ன என்ன தின்னும் ?
4. எறும்புகளின் நல்ல குணம் யாது ?

II. **பொருள் வேறுபாடு கூறு :**

| | |
|---|---|
| வெல்லம், வெள்ளம் | அரிந்து, அறிந்து |
| வலை, வளை | கரை, கறை |
| உரி, உறி | குலம், குளம் |

III. **எறும்பு** — ஒரு பொருளைக் குறிக்கிறது.—**ஒருமை.**
**எறும்புகள்** — ஒன்றுக்கு மேற்பட்டவைகளைக் குறிக்கிறது.—**பன்மை.**

IV. **கீழ் வருவனவற்றிற்குப் பன்மை கூறு :**
காய், தோட்டம், சிறுவன், புத்தகம், பாடம்.



# 9. ஔவை

ஔவைக் கிழவி நம்கிழவி
அமுதினும் இனிய சொற்கிழவி
செவ்வை நெறிகள் பற்பலவும்
தெரியக் காட்டும் பழங்கிழவி. 1

**நெல்லிக் கனியைத் தின்றுலகில்**
**நீடு வாழும் தமிழ்க்கிழவி**
**வெல்லற் கரிய மாந்தரெலாம்**
**வியந்து போற்றும் ஒருகிழவி. 2**

**கூழுக் காகக் கவிபாடும்**
**கூனக் கிழவி அவளுரையை**
**வாழும் வாழ்வில் ஒருநாளும்**
**மறவோம் மறவோம் மறவோமே. 3**

—கவிமணி

## சொற்கள்

| | | |
|---|---|---|
| ஔவை | பற்பல | வியந்து |
| கிழவி | நெல்லிக்கனி | போற்றும் |
| இனிய | தின்று | வாழ்வில் |
| செவ்வை | மாந்தர் | மறவோம் |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. ஔவையார் யார் ?
2. அவர் எப்படிப் பல வருஷங்கள் வாழ்ந்தார் ?
3. ஔவையார் எதற்காகக் கவி பாடினார் ?



## 10. குரங்குப் பாலம்

ஒரு காட்டிலே பல குரங்குகள் இருந்தன. அந்தக் காட்டுப்பக்கத்தில் ஓர் ஆறு ஓடியது. ஆற்றிலே வெள்ளம் வந்தது. ஆற்றின் அந்தக் கரையில் ஒரு கிராமம் இருந்தது.

குரங்குகள் எல்லாம் கிராமத்துக்குப் போகப் புறப்பட்டன. நடுவில் ஆற்றைக் கடக்க வேண்டும். பெரிய குரங்கு ஒன்று ஒரு யோசனை செய்தது. அது எல்லாக் குரங்கு களையும் கூப்பிட்டது.

"தம்பிமார்களே, ஆற்றில் வெள்ளம் வருகிறது. எதிரே உள்ள கிராமத்துக்குப்

போக ஒரு பாலம் கட்டலாம்'' என்று அது கூறிற்று. மிகவும் பலமுள்ள குரங்குகள் எல்லாம் ஒரு பெரிய மரத்தில் ஏறின. அந்த மரம் ஆற்றங்கரையில் இருந்தது. அதன் கிளை ஆற்றின் மேல் நீண்டு இருந்தது.

பெரிய குரங்கு அந்தக் கிளையின் நடுவில் தன் வாலைச் சுற்றியது. அது தலைகீழாகத் தொங்கியது. பின்னர் மற்றொரு குரங்கு சென் றது. இரண்டாவது குரங்கு, தொங்கி இருந்த முதல் குரங்கிடம் தன் வாலை நீட்டிற்று. அது அந்த வாலை விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. முதல் குரங்கின் கையில் இரண் டாவது குரங்கு தலைகீழாகத் தொங்கிற்று. மூன்ருவது குரங்கு வந்தது. அதுவும் தன் வாலை இரண்டாவது குரங்கின் கையில் கொடுத்தது. பின்னர் தலைகீழாகத் தொங்கியது. இப்படியே ஒன்றன்பின் ஒன்ருகச் சில குரங்குகள் தொங்கியது சங்கிலிபோல் இருந்தது. கடைசி குரங்கு சங்கிலியின் முனையைப் போல் இருந் தது. குரங்குச் சங்கிலி வர வர வேகமாக ஆடிற்று.

ஆற்றின் எதிர்க் கரையிலும் ஒரு மரம் இருந்தது. அந்த மரத்தின் கிளை ஒன்றும் ஆற்றுக்கு மேலே நீண்டு இருந்தது. சங்கிலி

முனையில் இருந்த குரங்கு அப்படியும் இப்படி யும் ஆடியது. கடைசியில் எதிர்க் கரையின் மரக்கிளையை அது பிடித்துக் கொண்டது. குரங்குப் பாலம் அமைந்து விட்டது.

அந்தப் பாலத்தின்மேல் குட்டிக் குரங்கு கள் ஏறி ஆற்றின் அக்கரை சேர்ந்தன. கடைசி யாகப் பாலமாக இருந்த குரங்குகளும்அக்கரை சேர்ந்தன. எப்படித் தெரியுமா? இந்தக் கரை யில், கிளையில் வாலைச் சுற்றியிருந்த முதல் குரங்கு தன் வாலைப் பிரித்துக் கொண்டது. அதனால் குரங்குச் சங்கிலி அக்கரையில் தொங்கிற்று.

சங்கிலியின் ஆட்டம் நின்றது. சங்கிலி யாகத் தொங்கிய குரங்குகள் எல்லாம் 'தொப் தொப்' பென்று கீழே குதித்தன; கிராமத்திற் குள் நுழைந்தன. அவை தம் விருப்பம்போல் வீடுகளிலும் தோட்டங்களிலும் புகுந்து கொள்ளை அடித்தன. அங்கே இருந்த சிற்றுண்டிகளையும் காய்கனிகளையும் வயிறு நிறைய உண்டு மகிழ்ந்தன.

சொற்கள்

| | | |
|---|---|---|
| பல | யோசனை | தலைகீழாக |
| வெள்ளம் | கூப்பிட்டது | சங்கிலி |

| | | |
|---|---|---|
| கரை | பாலம் | சேர்ந்தன |
| கிராமம் | ஆற்றங்கரை | எதிர்க்கரை |
| புறப்பட்டன | பிரித்து | நீட்டிற்று |
| அமைந்து | பலமுள்ள | சிற்றுண்டி |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. குரங்குகள் ஏன் எதிர்க்கரைக்குப் பாலம் கட்டின ?
2. குரங்குப் பாலம் எப்படி அமைக்கப்பட்டது ?
3. குட்டிக் குரங்குகள் ஆற்றை எவ்வாறு கடந்தன ?

II. 1. ஒரு காட்டில் பல குரங்குகள் **வசித்தன.**

2. என் தந்தை ஒரு பழம் **கொடுத்தார்.**

இவ்வாக்கியங்களில் **வசித்தன**, **கொடுத்தார்** ஆகிய சொற்கள் வேலைகளைக் காட்டுகின்றன. இவை **வினைச் சொற்கள்** ஆகும்.

III. **இப்பாடத்தி லிருந்து மூன்று பெயர்ச் சொற்களையும் மூன்று வினைச் சொற்களையும் எடுத்து எழுது :**

IV. **கீழ் வருவனவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :**

தலைகீழாக, ஒன்றன்பின் ஒன்றாக, எல்லாம், விருப்பம்போல்.

V. **எதிர்ப்பதம் கூறு :**

விருப்பம், வேகமாக, கெட்டியாக, சிறிய.

# 11. விடு கவிகள்

1. நாலு உலக்கை குத்திவர,
இரண்டு முறம் புடைத்துவர,
துடுப்பு ஒன்று துழாவிவர,
துரைமகன் ஏறிவர,
துடைப்பம் பெருக்கி வரும்.

—எது ?

2. ஒற்றைக் காலில் ஓடும் ;
ஓய்ந்து போனால் படுத்துக் கொள்ளும்.

—அது என்ன ?

3. ஒரு மரம் ; மரத்துக்குப் பன்னிரண்டு
கிளை; கிளைக்கு முப்பது இலை.

—உனக்குத் தெரியுமா ?

4. கத்திபோல் இலை இருக்கும்;
கவரிமான் பூப்பூக்கும்;
தின்னவே பழம் பழுக்கும்;
தின்னாத காய் காய்க்கும்.

—பெயர் என்ன ?

5. என் தாயார் சமுத்திரமே;
என் தந்தை சூரியனார்;
என்னைக் கொண்டு போற்றாதார்,
எவருமில்லை உலகினிலே.

—நான் யார் ?

விடைகள் மாறி இருக்கின்றன. கண்டுபிடி :

வேம்பு, யானை, உப்பு, பம்பரம், வருஷம் மாதம் நாள்.

## 12. வெள்ளைக் காக்கை

ஒரு நாள் காக்கை ஒன்று பசியாக இருந்தது. அதற்கு எங்கும் இரை அகப்படவில்லை. கடைசியில் ஒரு வீட்டுக் கூரையின் மேல் சென்று உட்கார்ந்தது. அங்குத் தரையில் தானியங்கள் சிந்திக் கிடந்தன. அவற்றைச் சில புறுக்கள் தின்பதைக் காக்கை கண்டது.



அந்தக் காக்கை, "நாமும் புறுக்களோடு சேர்ந்து திருட்டுத்தனமாகத் தானியங்களைத் தின்னலாம்" என்று நினைத்தது.



அது வெள்ளை வர்ணத் தொட்டி ஒன்றைத் தேடிச் சென்றது. அந்தத் தொட்டியில் இருந்த வெள்ளை வர்ணத்தைத் தன் உடல் முழுவதும் நனைத்துக் கொண்டு வெளியே புறப்பட்டது.

திரும்பி வந்த காக்கை புருக்களுடன் சேர்ந்துகொண்டது. காக்கையும்ஒரு வெள்ளைப் புருவைப் போலவே இருந்தது. புருக்கள் அதன் தந்திரத்தைக் கண்டுபிடிக்கவில்லை.



காக்கை தானியங்களை ஏராளமாகத் தின்று சந்தோஷப் பட்டது. சந்தோஷத்தால் அது தன்னையே மறந்தது. 'கா கா', 'கா கா', 'கா கா', என்று கரையலாயிற்று.

உண்மையை அறிந்த புருக்கள் காக்கையைக் கொத்தி விரட்டின. புருக்களிடமிருந்து தப்புவதற்காக வெள்ளைக் காக்கை தன் காக்கைக் கூட்டத்தை அடைந்தது. ஆனால் காக்கைகள் அதனை வேறு ஏதோ பறவை என்று எண்ணி விரட்டி விட்டன.



**பாவம்! பிறரை ஏமாற்ற நினைத்த காக்கை, தானே ஏமாற்றம் அடைந்தது. வெள்ளைக் காக்கை இங்கும் அங்கும் அலைந்து எங்கே போனதோ, தெரியவில்லை.**

**சொற்கள்**

| | | | |
|---|---|---|---|
| பசி | சிந்தி | தந்திரம் | ஏமாற்ற |
| இரை | வர்ணம் | அலைந்து | இங்குமங்கும் |
| கூரை | நினைத்து | விரட்டி | உண்மையை |

**பயிற்சி**

I. **விடை கூறு :**

1. தானியங்களைத் தின்பதற்குக் காக்கை என்ன தந்திரம் செய்தது ?
2. காக்கையின் தந்திரம் எப்படி வெளியாயிற்று ?
3. காக்கைக் கூட்டமும் அதை ஏன் விரட்டியது ?

II. **கோடிட்ட இடங்களில் தகுந்த பெயர்ச் சொற்களை அமைத்து எழுது :**

1. ——— இரையைத் தேடி அலைந்தது.
2. பகலில்———பிரகாசிக்கும்.
3. ———காக்கையைத் தெரிந்து கொண்டன.

III. **கோடிட்ட இடங்களில் தகுந்த வினைச் சொற்களை அமைத்து எழுது :**

1. கடைசியில் காக்கை ஒரு கூரையின் மேல்———.
2. பாரி பாடம் ———.
3. அணில் பாப்பாவுக்குப் பழம்———.
4. கண்ணன் பாட்டு ———.
5. செல்வி பந்து ———.



## 13. உயிரைக் காத்த உத்தமன்

பிள்ளைகளே! சென்னையிலிருந்து தாம்பரம் என்னும் ஊர் வரையில் மின்சார இரயில் வண்டி ஓடுகிறது. இதை நீங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். சிலர் இந்த வண்டியில் பிரயாணம் செய்தும் இருப்பீர்கள்.

சில ஆண்டுகளுக்கு முன் தாம்பரத்தி லிருந்து ஒரு மின்சார இரயில் வண்டி சென்னை நோக்கி வேகமாக ஓடிக் கொண் டிருந்தது. கருணாகரன் என்னும் அவ் வண்டி ஓட்டி மிகவும் திறமைசாலி.

வண்டி பல்லாவரத்துக்கு அருகில் வந்து கொண்டு இருந்தது. எதிரில் சிறிது தூரத்தில் ஒரு பூனைக்குட்டி இருப்புப் பாதையின் மேல் ஏறி, 'மியாவ், மியாவ்' என்று கத்திக் கொண்டே இருந்தது. பூனைக் குட்டியைப் பார்த்த வண்டிஓட்டி மனம் இரங்கினுன். உடனே நடுவழியிலேயே வண்டியை நிறுத்தி விட்டான்.

திடீரென்று வண்டி நடுவழியில் நின்று விடவே பிரயாணிகள் எல்லோரும் ஒன்றும் தோன்ருமல் திகைத்தார்கள். சிலர் வண்டியை விட்டுக் கீழே இறங்கி 'என்ன நடந்து விட்டது?' என்று பார்த்தனர். சிலர் வண்டியிலிருந்தே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

வண்டிஓட்டி கீழே இறங்கி அந்தப் பூனைக் குட்டியை எடுத்துத் தன்னிடம் வைத்துக் கொண்டான். வண்டிஓட்டியின் அன்பைக் கண்டு பிரயாணிகள் அவனைப் பாராட்டினுர்கள். அம்மா இல்லாத அந்தப் பூனைக் குட்டியை அவன் வீட்டுக்குக் கொண்டு போனுன். அங்கு அதை அன்புடன் வளர்த்து வந்தான்.

நீங்களும் உயிர்களிடத்தில் அன்பாக இருங்கள்.

## சொற்கள்

| | | |
|---|---|---|
| மின்சாரம் | எதிரில் | அன்பு |
| கேள்விப்பட்டு | நடுவழி | பிரயாணிகள் |
| ஆண்டுகள் | இரங்கி | உத்தமன் |
| நோக்கி | திகைத்தார்கள் | திடீரென்று |

## பயிற்சி

I. **விடை கூறு:**

1. மின்சார இரயில் வண்டி எங்கிருந்து எங்கே சென்றது ?
2. பூனைக் குட்டி எங்கே இருந்தது ?
3. கருணாகரன் பூனைக் குட்டியை எவ்வாறு காப்பாற்றினான் ?

II. **இப்பாடத்தில் உள்ள ஒருமைப் பெயர்களை எடுத்து எழுதி அவற்றின் பன்மைப் பெயர்களையும் குறிப்பிடு:**

| ஒருமை | பன்மை |
|---|---|
| வண்டி | வண்டிகள் |



# 14. யாவும் ஒரே தரம்

வெள்ளை நிறத்தொரு பூனை — எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்!
பிள்ளைகள் பெற்றதப் பூனை — அவை
பேருக்கு ஒருநிற மாகும். 1

சாம்பல் நிறமொரு குட்டி — கருஞ்
சாந்து நிறமொரு குட்டி.
பாம்பு நிறமொரு குட்டி — வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி. 2

எந்த நிறம்இருந் தாலும் — அவை
யாவும் ஒரேதரம் அன்றோ?
இந்த நிறம்சிறி தென்றும் — இது
ஏற்றமென் றும்சொல்ல லாமோ? 3

— பாரதியார்

# 15. குல்லா வியாபாரியும் குரங்குகளும்



**I. படத்தைப் பார்த்துக் கீழே குறிப்பிடப்பட்ட சொற்களைக் கொண்டு கதையைக் கூறு :**

குல்லா வியாபாரி ஒருவன்—குல்லா விற்பனை—களைப்பு—மரத்தின் கீழே படுத்தான்—தூக்கம்—குரங்குகள் குல்லாக்களை எடுத்துத் தலையில் போட்டுக் கொண்டன—வியாபாரி விழிப்பு—ஒரு குல்லாவை எறிதல்—குரங்குகளும் எறிதல்—குல்லா வியாபாரி எடுத்துக் கொண்டு செல்லுதல்.

**II. படம் பார்த்துக் கீழ் வரும் கேள்விகளுக்குப் பதில் எழுது :**

1. குல்லா வியாபாரி எங்கே சென்றான்?
2. அவன் மரத்தின் கீழே ஏன் தூங்கினான் ?
3. குரங்குகள் என்ன செய்தன ?
4. குல்லாக்களைக் காணாத வியாபாரி என்ன செய்தான் ?
5. குரங்குகள் குல்லாக்களை ஏன் கீழே எறிந்தன ?

---

# 16. பழமொழிகள்

## கடவுள்

காலையில் எழுந்து கடவுளைத் தொழு.
கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.
திக்கற் றவர்க்குத் தெய்வமே துணை.

## கல்வி

காலை மாலை நூலை ஓது.
இளமைக் கல்வி சிலையில் எழுத்து.
பாடம் ஏறினும் ஏடது கைவிடேல்.
கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு.

## செல்வம்

பணம் பந்தியிலே ; குலம் குப்பையிலே.
ஈட்டி எட்டினமட்டும் பாயும்;
பணம் பாதாளம் வரையும் பாயும்.
பணம் இல்லாதவன் பிணம்.
பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை.

## சுத்தம்

கூழா னாலும் குளித்துக் குடி.
கந்தையா னாலும் கசக்கிக் கட்டு.
சுத்தம் சோறு போடும்.

# முயற்சி

**முயன்ருல் முடியாதது உண்டோ?**
**முயற்சி திருவினை ஆக்கும்.**
**முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்.**

## சொற்கள்

| | | |
|---|---|---|
| கைவிடப்படார் | பாதாளம் | இகழ்ச்சி |
| திக்கற்றவர் | கசக்கி | முயன்ருல் |
| சிலையில் | முயற்சி | கல்வி |
| நூலை | திரு | செல்வம் |
| ஏடு | ஆக்கும் | சுத்தம் |

## பயிற்சி

1. உனக்குத் தெரிந்த வேறு பழமொழிகளை எழுது.
2. பெற்ருேர்களைப் பற்றிய பழமொழிகளைத் திரட்டி எழுது.
3. பயிர்த்தொழிலைப் பற்றிய பழமொழிகள் சிலவற்றைக் கூறு.



## 17. யார் பலசாலி ?

ஒரு நாள் காற்று சூரியனைப் பார்த்துச் சிரித்தது. சூரியன் காற்றைப் பார்த்து, "காற்றே, காற்றே ! என்ன இளிக்கிறாய். என்னைப் பார்த்தால் உனக்குச் சிரிப்பு வருகிறதோ ?" என்று கேட்டது.

காற்று :—சிரிப்பு வராமல் என்ன செய்யும் ? நீ மெலிந்தவன். உன்னைவிட நான் பலசாலி. என்னைவிடப் பலசாலி இந்த உலகத்தில் உண்டோ ?

சூரியன் :—காற்றே! ஏன் இப்படிக் கர்வம் கொள்கிறாய் ? என்னை வெல்ல உன்னால் முடியுமோ ?

காற்று :—சூரியனே ! என்னை யார் என்று நினைத்துக்கொண்டாய்! நான் விரும்பினால் இந்த உலகத்தையே பம்பரமாகச் சுழற்றி விடுவேன். உன்னால் என்ன செய்ய முடியும் ?

சூரியன் :—என்ன சொன்னாய்! வா. நமது சக்தியைச் சோதித்துப் பார்த்து விடலாம். அதோ தெருவில் ஒரு மனிதன் போகிறான். அவன் சட்டையை யார் கழற்றும் படி செய்கிறாரோ அவரே வென்றவர். என்ன சொல்லுகிறாய் ?

காற்று :—பேஷ் ! பலே பேஷ் ! அப்படியே செய்யலாம். முதலில் நானே அவன் சட்டையைக் கழற்றும்படி செய்கிறேன்.

சூரியன் :—ஓ ! கழற்று, பார்க்கலாம்.

சூரியன் மேகத்தில் மறைந்து பார்த்துக் கொண்டு இருந்தது. காற்று பலமாக வீசிற்று. அந்த மனிதன் சட்டையைக் காற்றில் கழலாத படி பிடித்துக்கொண்டான். மறுபடியும் காற்று மிக வேகமாக வீசிற்று. அந்த மனிதன் அப்போதும் சட்டையைக் கழற்றாமல் இறுகப்

பிடித்துக்கொண்டான். அது கண்ட காற்று மிகமிக வேகமாக வீசியது. "சீ ! என்ன காற்று இது !" என்று சொல்லிக்கொண்டே அவன் தன் சட்டையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். காற்றினுல் ஒன்றும் செய்ய முடியவில்லை.

சூரியன் மேகத்தி லிருந்து வெளியே வந்தது. அது காற்றைப் பார்த்து, "காற்றே, காற்றே! இப்போது என்ன சொல்லுகிருய் ?" என்று கேட்டது.

காற்று:—சூரியனே! வீண் பேச்சு எதற்கு? நீ அந்த மனிதன் சட்டையைக் கழற்றும்படி செய், பார்க்கலாம்.

சூரியன் :—சரி, இதோ பார் !

சூரியன் நன்ருகக் காய்ந்தது. அதனுல் அந்த மனிதன் உடம்பு வியர்த்தது. அவன் "உஸ், உஸ்," என்று ஊதிக்கொண்டே சட்டையின் பொத்தான்களை நீக்கினுன். சூரியன் மேலும் வெப்பமாகக் காய்ந்தது. அ வ ன், "அப்பப்பா ! என்ன வெயில் ! என்ன வெயில் !" என்று கூறினுன். சூரியன் மேலும் மிகக் கடுமையாகக் கா ய் ந் த து. உடனே அந்த மனிதன், "ஐயோ ! புழுக்கம் தாங்க முடிய வில்லையே" என்று சொல்லிக் கொண்டே

தன் சட்டையைக் கழற்றி வைத்துக் கொண்டான்.

சூரியன் காற்றைப் பார்த்துச் சிரித்தது. காற்று சூரியனைப் பார்த்துத் தலை குனிந்தது. காற்று வெட்கம் அடைந்தது.

சூரியன், "காற்றே! இப்போது சொல், யார் பலசாலி?" என்றது.

காற்று, "சூரியனே! நீயே பலசாலி" என்று ஒப்புக் கொண்டது.

*நீதி*

'வீண் கர்வம் கூடாது.'

### சொற்கள்

| | | |
|---|---|---|
| இளிக்கிறாய் | சக்தி | வீண் பேச்சு |
| பலசாலி | சோதித்து | வியர்த்தது |
| மெலிந்தவன் | கழற்றும்படி | வெப்பமாக |
| உலகத்தில் | வென்றவர் | காய்ந்தது |
| உண்டோ | மேகம் | நீக்கினால் |
| கர்வம் | மறைந்து | புழுக்கம் |
| வெல்ல | வீசிற்று | தாங்க |
| முடியுமோ | மிகமிக | வெட்கமாக |
| சுழற்றி | கெட்டியாக | இறுக |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. காற்று ஏன் சூரியனைப் பார்த்துச் சிரித்தது ?
2. அது மனிதன் சட்டையைக் கழற்ற என்ன செய்தது ?
3. காற்று மேலும் மேலும் வீசியபோது மனிதன் என்ன செய்தான் ?
4. சூரியன் எவ்வாறு மனிதனின் சட்டையைக் கழற்றச் செய்தது ?
5. இதனால் அறியும் நீதி யாது ?

II. **கீழ் வரும் சொற்களை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :**

கர்வம், கழற்றி, பலமாக, வேகமாக, தாங்கமுடியவில்லை.

III. **எதிர்ப்பதம் கூறு :**

சிரிப்பு, முடியும், வென்றவர், வெளியே, வெப்பம்.

IV. **சரியான வாக்கியங்களுக்கு நேராக √ இக்குறி இடு ; தவறான வாக்கியங்களுக்கு நேராக × இக்குறி இடு :**

1. சூரியன் மிகவும் குளிர்ச்சியானது.
2. மரங்கள் அசைந்தால் காற்று வீசும்.
3. வெயிலில் சட்டை அணிவது நல்லது.
4. காற்று அடித்தால் புழுக்கம் இராது.
5. மேகங்கள் கருமையானால் மழை உண்டாகும்.

V. **புலி** காட்டில் வசிக்கிறது.—**ஒருமை.**

**புலிகள்** காட்டில் வசிக்கின்றன.—**பன்மை.**

VI. **கீழ்வரும் வாக்கியங்களில் ஒருமைப் பெயர்களைப் பன்மைப் பெயர்களாக மாற்றி எழுது :**

1. குருவி தானியத்தைத் தின்றது.
2. பசு வயலில் மேய்கிறது.
3. அவள் செடிக்குத் தண்ணீர் ஊற்றினாள்.
4. நாய் வீட்டைக் காக்கும்.
5. மோதிரம் பையில் இருந்தது.

---



## 18. நல்ல மழை

நல்லமழை பெய்ததனுல்
நாடு செழித்ததப்பா.

பூமி குளிர்ந்ததுவே ;
பொய்கைகள் நிரம்பினவே.

ஏரிகள் நிரம்பினவே ;
எதிர்ந்ததே ஏகவெள்ளம்.

ஆறுகள் நிரம்பினவே ;
அணைகள் அழிந்தனவே.

**குளங்கள் நிரம்பினவே**
**குதித்தன மீன்களெலாம்.**

**தருக்கள் தளிர்த்தனவே ;**
**தாமரைகள் பூத்தனவே.**

**செடிகள் கொடிகள்எல்லாம்**
**செழிப்பாய்த் தளிர்த்தனவே ;**

**செந்நெல் விளைந்ததுவே ;**
**தேசம் செழித்ததுவே.**

— அல்லியரசாணி மாலை

## சொற்கள்

| | | |
|---|---|---|
| பெய்ததனல் | ஏகவெள்ளம் | செழிப்பாய் |
| செழித்தது | நிரம்பின | தளிர்த்தன |
| குளிர்ந்தது | அணைகள் | செந்நெல் |
| பொய்கைகள் | அழிந்தன | விளைந்தது |
| ஏரிகள் | குதித்தன | பூத்தன |
| எதிர்ந்தது | தருக்கள் | தேசம் |

## பயிற்சி

1. மழை பெய்ததனல் என்னென்ன உண்டாயின ?
2. நாடு என்பதற்கு இப்பாடத்தி லிருந்து வேறு ஒரு சொல் கூறு.

## 19. கடிதத்தின் பிரயாணம்

சண்முகம் என்னும் சிறுவன் மூன்ரும் வகுப்பில் படிக்கிருன். அவனுக்குக் கண்ணன் என்று ஒரு நண்பன் உண்டு. சண்முகம் சென்னையில் வசிக்கும் மாணவன். கண்ணன் திருவத்திபுரம் என்னும் ஊரில் இருக்கிருன்.

சண்முகத்தின் அண்ணனுக்குத் திருமணம் நடக்க இருந்தது. அவன் அதைத் தன் நண்பனுக்குத் தெரிவிக்க விரும்பினுன். தபால் நிலையத்துக்குச் சென்று முக்காலணு கொடுத்து ஒரு கார்டு வாங்கி வந்தான்.

சண்முகம் கண்ணனைக் கட்டாயம் திருமணத்துக்கு வரும்படி அழைத்தான். அவன் கார்டின் ஒரு பக்கத்தில் அச்செய்தியை எழுதினுன். மற்ருெரு பக்கத்தில் நண்பனின் விலாசத்தை எழுதினுன். பிறகு அவன் அதைத் தன் வீட்டுக்கு அருகில் இருக்கும் ஒரு தபால் பெட்டியில் போட்டான்.

சிறிது நேரத்தில் ஒரு தபால் சேவகன் தபால் பெட்டியண்டை வந்தான். அவன் தபால் பெட்டியைத் திறந்து எல்லாக் கடிதங்களையும் எடுத்துக்கொண்டு தபால் நிலையத்




கடிதத்தின் பயணத்தைப்
படங்களில் வரிசையாகப் பாருங்கள்.

துக்குப் போனான். அங்குச் சண்முகம் எழுதிய கடிதத்துக்கும் மற்ற கடிதங்களுக்கும் முத்திரை அடித்தார்கள். முத்திரை அடித்த கடிதங்களை ஒரு பையில் போட்டுக் கட்டினார் கள். அப்பையை ஒரு வண்டியின் மூலம் இரயில்வே நிலையத்துக்கு அனுப்பினார்கள்.

இரயில் வண்டியில் இன்னும் பல தபால் பைகள் இருந்தன. அந்தப் பைகளை அவிழ்த்து அவற்றில் உள்ள கடிதங்களைப் பல பிரிவுகளா கப் பிரித்தார்கள். அவற்றைத் தனித்தனியான பைகளில் கட்டினார்கள். அந்த அந்த நிலையங் களில் அந்த அந்தப் பைகள் இறக்கப்பட்டன.

திருவத்திபுரத்துக்கு அருகில் இருக்கும் திண்டிவனம் இரயில் நிலையத்தில் சண்முகம் எழுதிய கடிதம் உள்ள பையை இறக்கினார்கள். அது ஒரு மோட்டார் வண்டியில் திருவத்தி புரத்தை அடைந்தது. அவ்வூரில் உள்ள தபால் நிலையத்தார் அந்தப் பையில் உள்ள கடிதங்களை எல்லாம் ஒரு மேஜையின் மேல் கொட்டினார் கள். அவற்றின் மேல் முத்திரை அடித்தார் கள். பிறகு தபாற் சேவகர்கள் அந்தக் கடிதங் களை எடுத்துச் சென்றார்கள்.

தபால் சேவகர்கள் வீடு வீடாகச் சென்று அவரவர் கடிதங்களைக் கொடுத்தார்கள்.

சண்முகம் எழுதிய அக் கடிதம் கண்ணன் வீட்டுக்குச் சென்றது. கண்ணன் கடிதத்தைப் படித்துப் பார்த்தான். அவன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். திருமணத்துக்கு வருவதாக அவனும் பதில் எழுதினன்.

## சண்முகம் எழுதிய கடிதம்

21, அப்பர்சாமி கோயில் தெரு,
சென்னை—4.
21—9—'54.

அன்புள்ள கண்ணனுக்கு வணக்கம்.

நீ ஏன் பல நாட்களாகக் கடிதம் எழுதவில்லை. தம்பி பாரி பள்ளிக்கூடம் போகிருனு?

என் அண்ணனுக்கு அடுத்த 29—9—'54 புதன் கிழமை திருமணம் நடக்கப் போகிறது. நீயும் உன் தகப்பனரும் கட்டாயம் திருமணத்துக்கு வரவேண்டும்.

சென்னையில் பல அழகான இடங்கள் இருக்கின்றன. நீ வந்தால் அவற்றையும் பார்க்கலாம்.

இப்படிக்கு,
உன் அன்புள்ள நண்பன்,
சண்முகம்.

விலாசம் :

**திரு. கண்ணன்,**

33, பெரிய தெரு,

**திருவத்திபுரம்.**

(வடார்க்காடு ஜில்லா)

---

# கண்ணன் எழுதிய கடிதம்

33, பெரிய தெரு,

**திருவத்திபுரம்.**

24—9—'54.

அன்புள்ள சண்முகத்துக்கு வணக்கம்.

உன் கடிதம் கிடைத்தது. நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். உன் விருப்பப்படியே என் தகப்பனுருடன் நான் உன் அண்ணன் திருமணத்துக்கு வருகிறேன்.

நாங்கள் இருவரும் செவ்வாய்க்கிழமை காலையிலேயே இங்கிருந்து புறப்படுவோம்.

இப்படிக்கு,

உன் அன்புள்ள,

**கண்ணன்.**

விலாசம் :

**திரு. சண்முகம்,**

21, அப்பர்சாமி கோயில் தெரு,

**மயிலாப்பூர்,**

**சென்னை—4.**

## சொற்கள்

| | | |
|---|---|---|
| நண்பன் | செய்தி | அடைந்தது |
| திருமணம் | விலாசம் | மகிழ்ச்சி |
| விரும்பினால் | அருகில் | அடுத்த |
| நிலையம் | முத்திரை | புறப்படுவோம் |
| கார்டு | அவிழ்த்து | வீடுவீடாய் |
| கட்டாயம் | இறக்கப்பட்டன | தனித்தனியான |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. சண்முகம் யாருக்குக் கடிதம் எழுதினான்?
2. கடிதம் எங்கே போடப்பட்டது?
3. கடிதம் எவ்வாறு இரயில்வே நிலையத்துக்குச் சென்றது?
4. கடிதம் எப்படி கண்ணனிடம் சேர்ந்தது?
5. கண்ணன் கடிதம் கிடைத்ததும் என்ன செய்தான்?

II. **வாக்கியங்களில் அமைத்து எழுது :**

நண்பன், தெரிவிக்க, அவிழ்த்து, வீடு வீடாக, தனித் தனியான.

III. **நீ பரீட்சையில் வெற்றி பெற்றதைப் பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.**

IV. **பன்மை எழுது :**

கடிதம், தெரு, வீடு, நாள், மரம்.

V. **கீழ்வரும் எழுத்துக்களின் கூட்டம் ஒவ்வொன்றை யும் ஒரு சொல்லாக அமைத்து எழுது:**

1. டிதகம்
2. காதபான்ரல்
3. ண்பநன்
4. லாவிசம்
5. மதிம்ருண
6. பதகப்ன்
7. டுர்கா
8. ன்செனை
9. ணவகக்ம்
10. ம்தபி

---

# 20. நல்ல கையெழுத்து

பிள்ளைகளே! நீங்கள் வீட்டிலும் பள்ளிக் கூடத்திலும் உங்கள் பாடங்களை எழுதுகிறீர்கள் அல்லவா ? உங்கள் கையெழுத்து அழகாக இருந்தால் அதை எல்லாரும் படிக்க விரும்புவார்கள். நன்ருக இல்லாத கையெழுத்தை யாரும் விரும்ப மாட்டார்கள்.

சில பிள்ளைகள் கிறுக்கிக் கிறுக்கி எழுதுகிருர்கள். அவர்கள் நிறுத்தித் தெளிவாக எழுதப் பயிற்சி செய்ய வேண்டும். தினந் தோறும் கையெழுத்து எழுதிப் பழகி வந்தால் எழுத்து அழகாக இருக்கும்.

எழுதும்போது நீங்கள் கவனித்து எழுத வேண்டும். நேராக உட்கார்ந்து சரியாக எழுதவேண்டும். ஒரு சொல்லுக்கும் மற்ருெரு சொல்லுக்கும் நடுவில் சிறிது இடம் விட்டு எழுத வேண்டும். எழுதுகோலைக் கட்டை விரலுக்கும் சுட்டுவிரலுக்கும் இடையில் சிறிது சாய்த்துப் பிடிக்க வேண்டும்.

நீங்கள் எழுதும்போது எழுத்தின் உருவத்தை நன்ருகக் கவனித்து அச்சுபோல்

எழுதப் பழகுவது நல்லது. சில பிள்ளைகள் சில எழுதுக்களைமட்டும் பெரியனவாகவும் சில எழுத்துக்களை மட்டும் சிறியனவாகவும் எழுது வார்கள். அது பார்வைக்கு நன்றாக இராது. எழுத்துக்கள் ஒரு அளவாக இருக்கவேண்டும். வரிகள் தவறுமல் நேராக எழுத வேண்டும். நீங்கள் உபயோகிக்கும் எழுதுகோலும் சிறிது கூர்மையாக இருப்பது நல்லது. எழுத்துக்கள் பார்வைக்கு முத்துக் கோத்தது போல ஒழுங்காக இருக்க வேண்டும். ஒரு வரிக்கும் மற்றொரு வரிக்கும் நடுவில் உள்ள தூரம் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும். சில பிள்ளைகள் 'மு', 'ழு' போன்ற எழுத்துக்களை வித்தியாசம் தெரியாமல் மாறி எழுதுவது உண்டு. அப்படி எழுதுவது தவறு. ணை ள, ளை போன்ற எழுத்துக்களையும் எப்படி இருக் கின்றன என்று கவனித்து எழுத வேண்டும்.

எப்போதும் அவசரமாக எழுதக் கூடாது. புத்தகங்களைப் பார்த்து எழுதும்போது தவறு இல்லாமல் க வ னி த் து எழுத வேண்டும். சாய்ந்து கொண்டும் படுத்துக் கொண்டும் கையெழுத்து எழுதக் கூடாது.

கையெழுத்து அழகாக இருந்து விடை களும் சரியாக இருந்தால் பரீட்சையில் நிறைய

**'மார்க்கு'கள் கிடைக்கும். கையெழுத்து நன்ருக இருந்தால் நல்ல உத்தியோகமும் கிடைக்கும். சிலர் கையெழுத்து நன்ருக வர வில்லையே என்று கவலைப்படுவார்கள். எழுதி எழுதிப் பழகினுல் கையெழுத்து மிக நன்ருக அமையும்.**

**'சித்திரமும் கைப்பழக்கம்.'**

**சொற்கள்**

| | | |
|---|---|---|
| கையெழுத்து | தொகை | கட்டைவிரல் |
| நன்ருக | தெளிவாக | தவறு |
| மாணவர்கள் | பயிற்சி | அவசரமாக |
| பிடிக்கவில்லை | நடுவில் | விடை |
| கிறுக்கி | சாய்ந்து | பரீட்சை |
| நிறுத்தி | சுட்டுவிரல் | கிடைக்கும் |

**பயிற்சி**

I. **விடை கூறு :**

1. எழுதும்போது நாம் கவனிக்கவேண்டியவை எவை?

II. 1. **மாமன், அப்பா, அண்ணன்**—இவை ஆணைக் குறிக்கின்றன. ஆணைக் குறிப்பவை **ஆண்பால்.**

2. **மாமி, அம்மா, அண்ணி** — இவை பெண்ணைக் குறிக்கின்றன. இவ்வாறு பெண்ணைக் குறிப்பவை **பெண்பால்.**

III. **கீழ் வருவனவற்றை ஆண்பால், பெண்பால் எனப் பிரித்து எழுது :**

தாத்தா, அக்காள், வண்ணாத்தி, குறவன், தங்கை, பாட்டி, அண்ணன், தம்பி, குறத்தி, வண்ணான்.

IV. **தெரிந்துகொள்:**

| **ஒருமை** | **பன்மை** |
|---|---|
| நான் | நாம், நாங்கள் |
| நீ | நீர், நீங்கள் |
| அது | அவை, அவைகள் |
| இது | இவை, இவைகள் |
| எது | எவை, எவைகள் |
| அவன், அவள் | அவர், அவர்கள் |
| இவன், இவள் | இவர், இவர்கள் |

# 21. 'வானம் விழுந்து விட்டதே'

முன்ஞெரு காலத்தில் ஒரு கோழிக்குஞ்சு இருந்தது. அது ஒரு நாள் இரைதேட ஓர் ஆலமரத்தின் கீழே போயிற்று. அப்போது அதன் தலையில் ஆலம்பழம் ஒன்று விழுந்தது.



'ஐயோ! வானம் விழுந்து விட்டதே!' என்று கோழிக்குஞ்சு பயந்தது.

அது திரும்பிப் பார்க்காமல் தனது அம்மாவிடம் சென்று, "அம்மா, அம்மா! வானம் விழுந்து விட்டதே" என்றது. அதைக் கேட்ட தாய்க்கோழி, "கண்ணே! வா, ராஜாவிடம் போய்ச் சொல்லலாம்" என்று கூறியது. கோழியும் கோழிக் குஞ்சும் அரண்மனை நோக்கி நடந்தன.



வழியில் ஒரு சேவல் நின்று கொண்டிருந்தது. கோழி, "ஐயா, சேவலாரே!

கேட்டீரா கதையை?'' என்றது. சேவல் "என்ன சங்கதி? எனக்குத் தெரியாதே'' என்றது. "கோழிக்குஞ்சின் தலையில் வானம் விழுந்து விட்டது. நாங்கள் இந்தச் செய்தியை ராஜாவிடம் சொல்லப் போகிறோம். நீரும் வருகிறீரா?'' என்று தாய்க்கோழி கேட்டது. சேவலும் அவைகளுடன் சென்றது.

மூன்றும் வழியில் ஒரு வாத்தைப் பார்த்தன. வாத்து அவைகளிடம், "என்ன சேதி? ஏன் இவ்வளவு வேகமாக ஓடுகிறீர்கள்'' என்று கேட்டது. அதற்குச் சேவல், "வாத்தே, வாத்தே! கோழிக் குஞ்சின் தலையில் வானம் விழுந்து விட்டதாம்; அதைக் கோழிக்குஞ்சு தாய்க் கோழியிடம் சொன்னதாம்; தாய்க் கோழி என்னிடம் சொல்லிற்று; இதை நாங்கள் ராஜாவிடம் தெரிவிக்கப் போகிறோம். நீயும் எங்களுடன் வா'' என்று கூப்பிட்டது. "அப்படியா! நானும் இதோ வருகிறேன்'' என்று வாத்தும் அவைகளுடன் அரண்மனைக்குப் புறப்பட்டது.



நான்கும் வேகமாக நடந்து சென்றன. அவைகளின் எதிரே ஒரு நாய் வந்தது. "நான்கு பேரும் இப்படி வேகமாக எங்கே போகிறீர்கள்?" என்று நாய் கேட்டது. அதற்கு வாத்து, "நாயண்ணு, நாயண்ணு! கோழிக் குஞ்சின் தலையில் வானம் விழுந்து விட்டதாம்; அது தாய்க்கோழியிடம் சொல்லிற்று; தாய்க் கோழி சேவலிடம் சொன்னது; சேவல் என்னிடம் சொன்னது; நாங்கள் எல்லோரும் ராஜாவிடம் சொல்லப் போகிறோம்; நீங்களும் எங்களுடன் வருகிறீர்களா?" என்றது.

நாய் வாத்தைப் பார்த்து, "வானம் எந்த இடத்தில் விழுந்தது? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டது. வாத்து, "எனக்குத் தெரியாது. சேவலைக் கேளுங்கள்" என்றது. சேவல், "எனக்குத் தெரியாது. தாய்க் கோழியைக் கேளுங்கள்" என்று கூறியது. தாய்க்கோழி, "எனக்குத் தெரியாது; கோழிக்குஞ்சைக் கேளுங்கள்" என்றது. "வாருங்கள், வானம் விழுந்த இடத்தைக் காட்டுகிறேன்" என்று கோழிக்குஞ்சு கூப்பிட்டது.



கோழிக்குஞ்சு, தாய்க்கோழி, சேவல், வாத்து, நாய் ஆகிய ஐந்தும் ஆலமரத்தின் கீழே சென்றன.

"இங்கேதான் வானம் விழுந்துவிட்டது" என்று கோழிக் குஞ்சு ஓர் இடத்தைக் காட்டியது. அப்போது மற்றொரு ஆலம்பழம் அதன் தலைமேல் விழுந்தது. "ஐயோ! மற்றொரு வானம் விழுகிறதே !" என்று கோழிக்குஞ்சு கத்தியது. அங்கே விழுந்த ஆலம் பழத்தைப் பார்த்து நாயும், வாத்தும், சேவலும், தாய்க் கோழியும் கொல்லென்று சிரித்தன. கோழிக் குஞ்சு திரும்பிப் பார்த்தது. "வானத்தை இதோ விழுங்குகிறேன் பார் !" என்று சொல்லி ஆலம்பழத்தைச் சேவல் வாயில் போட்டு விழுங்கிவிட்டது. கோழிக்குஞ்சு வெட்கப் பட்டது. அது 'குடுகுடு' வென்று வீட்டுக்கு ஓட்டம் பிடித்தது.

சொற்கள்

| | | |
|---|---|---|
| கோழிக்குஞ்சு | சங்கதி | வேகமாக |
| இரை | வானம் | கேளுங்கள் |
| விழுந்தது | சென்றது | காட்டிற்று |
| திரும்பிப்பாராமல் | சேதி | மற்றொரு |
| தாய்க்கோழி | தெரிவிக்க | கொல்லென்று |
| அரண்மனை | கூப்பிட்டது | குடுகுடுவென்று |
| கதை | புறப்பட்டது | சிரித்தன |

## பயிற்சி

**I. விடை கூறு :**

1. கோழிக்குஞ்சின் தலையில் என்ன விழுந்தது ?
2. தன் தலையில் ஒரு பழம் விழுந்தபோது கோழிக் குஞ்சு என்ன நினைத்தது ?
3. வானம் விழுந்த கதையை நம்பியவை எவை ? நம்பாதது எது ?
4. ' ஐயோ ! மற்றொரு வானம் விழுகிறதே ' என்று எப்போது எது சொல்லிற்று ?
5. சேவல் ஆலம்பழத்தை என்ன செய்தது ?

**II. இவற்றைக் கவனி :**

1. நான் ஒரு புத்தகம் வாங்கினேன்.
2. நீ ஒரு புத்தகம் வாங்கினாய்.

**III. கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை நிரப்பு :**

1. அவன் ஒரு புத்தகம் ————.
2. அவள் ஒரு புத்தகம் ————.
3. அவர் ஒரு புத்தகம் ————.
4. நாங்கள் புத்தகங்கள் ————.
5. நீங்கள் புத்தகங்கள் ————.

# 22. நடவாத நண்பர்கள்

பிள்ளைகளே! முன்னே ஒரு பாடத்தில் நமக்கு உபயோகமான ஊமை நண்பர்களைப் பற்றிப் படித்தீர்கள். மரங்களிலும் நமக்கு மிகவும் பயன்தரக்கூடிய மரங்கள் பல உண்டு. மரங்கள் நடக்கமாட்டா. ஆகையால் அவற்றை நடவாத நண்பர்கள் என்று கூறலாம். நம் நாட்டில் பல வகையான மரங்கள் இருக்கின்றன. அவற்றில் முக்கியமானவை வாழை மரம், மா மரம், தென்னை மரம், பனை மரம்என்பனவாகும்.



வாழை மரம் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். இம் மரத்துக்கு விதை இல்லை. இதன் அடியில் வாழைக் கன்றுகள் தோன்றுவதைப் பார்க்கலாம். வாழை மரத்துக்குக் கிளைகள் இல்லை. வாழை இலை மிகவும் பெரியதாகவும் வழவழப்பாகவும் இருக்கும்.

வாழை மரங்களில் ரஸ்தாளி, மொந்தன், பூவன், பேயன், விசிறி எனப் பல வகைகள் உண்டு. வாழைக் குலையில் காய்கள் சீப்புச் சீப்பாகக் காய்க்கும். வாழை மரம் ஒரு தடவைக்கு மேல் குலை தள்ளாது.

வாழையின் இலை, காய், பூ, பழம், தண்டு, நார் முதலிய எல்லாப் பாகங்களும் நமக்குப் பயன்படுகின்றன? அவை எப்படிப் பயன்படுகின்றன? நீங்களே கூறுங்கள்.

மா மரத்தினால் மக்களுக்கு மிகவும் பயன் உண்டு. மா மரங்கள் கூட்டமாக இருக்கும் இடத்துக்கு மாந்தோப்பு என்று பெயர். ஆற்றங் கரைகளைச் சேர்ந்த இடங் களில் மாந்தோப்புகளைக் காணலாம்.



மா மரங்களில் ஒட்டு மா மரம் என்றும் நாட்டு மா மரம் என்றும் இரு வகை உண்டு. நாட்டு மா மரங்கள் பருத்தும் உயர்ந்தும் வளரும். ஒட்டு மா மரங்கள் தாழவே கிளைத்து வளரும். மா மரத்தின் செடிக்கு மாங்கன்று என்று பெயர்.

மாங்காய் கொத்துக் கொத்தாகக் காய்க்கும். மாவின் பிஞ்சுக்கு மாவடு என்று பெயர். மாவடுவையும் மாங்காயையும் ஊறு காய் போடுவார்கள். மாம்பழம் இனிமையாக இருக்கும். வைகாசி, ஆனி மாதங்களில் மாம்பழங்கள் அதிகமாகக் கிடைக்கும். மாவிலையைத் தோரணம் கட்டுவார்கள். மா மரத்தைப் பலகைகளாக அறுத்துப் பெட்டிகளும் கதவுகளும் செய்வார்கள். மாந்தோப்பு நிழல் மிகவும் குளிர்ச்சியாக இருக்கும்.



தென்னை மரம் உயரமாக வளரும். தென்னை மரங்கள் நிறைந்த இடத்துக்குத் தென்னந் தோப்பு என்று பெயர். இம்மரத்தின் உச்சியில் மட்டைகளும், மட்டைகளில் ஓலைகளும் உண்டு. தென்னை மிகவும் உபயோகமான மரம்.

தென்னை மரத்தின் அடிப்பாகத்தை அறுத்து வீடுகள் கட்டலாம். ஓலையைக் கீற்றாக

முடைந்து கூரைகளும் பந்தல்களும் போடலாம். தென்னையின் காயைத் தேங்காய் என்பர். முற்ருத தேங்காய் இளநீர் ஆகும். நன்ருய் முற்றிய தேங்காய்க்கு நெற்று என்று பெயர். இதில் உள்ள பருப்பு கொப்பரை எனப்படும். கொப்பரையிலிருந்து தேங்காய் நெய் எடுக்கிருர்கள். தேங்காய் ஓடுகளில் பொத்தான்கள் செய்கிருர்கள். தேங்காய் நாரினுல் கயிறு திரிப்பார்கள்.



பனைமரம் மணற்பாங்கான இடங்களில் செழிப்பாக வளரும். இதன் அடி பருத்தும் நுனி சிறுத்தும் இருக்கும். பனை மரத்துக்குக் கிளைகள் இல்லை. ஆனுல் மட்டைகள் உண்டு. பனங்காய்கள் குலை குலையாகத் தொங்கும்.

பனை மரத்தின் ஒவ்வொரு பாகமும் நமக்கு உபயோகப் படுகிறது. அதன் அடிமரத்தினுல் தூணும் தூலமும் செய்கிருர்கள். பனை ஓலையால் விசிறி, குடை, பாய், பெட்டி போன்றவைகளைச் செய்கிருர்கள்.

முற்காலத்தில் பனை ஓலைகளில் எழுதி வந்தார்கள். எழுதப்பட்ட ஓலைகளுக்கு ஓலைச் சுவடி என்று பெயர்.

பனங்காய்களில் நுங்குகள் இருக்கும். அவை மிகவும் இனிமையாக இருக்கும். பனம் பழத்தைச் சிலர் ஆவலாகத் தின்பார்கள். பனஞ் சாற்றைப் பதநீர் என்று கூறுவார்கள். பதநீரி லிருந்து பனை வெல்லமும் பனங் கற்கண்டும் செய்வார்கள்.

## சொற்கள்

| | | |
|---|---|---|
| பயன்தரக்கூடியது | மாவடு | இளநீர் |
| உபயோகமான | இனிமையாக | நெற்று |
| வகை | வைகாசி | பொத்தான்கள் |
| பயன் | ஆனி | ரஸ்தாளி |
| நாட்டு மா மரம் | அறுத்து | மொந்தன் |
| ஒட்டு மா மரம் | மணற்பாங்கான | பூவன் |
| பருத்து | தூண் | பேயன் |
| தாழ | தூலம் | விசிறி |
| மாங்கன்று | ஓலைச்சுவடி | யோசித்து |

## பயிற்சி

I. **விடை கூறு:**

1. பல வகை மாம்பழங்கள் யாவை?
2. பனை மரத்தின் பயன்கள் யாவை?

3. பனை ஓலையால் என்னென்ன செய்யலாம்?

4. தென்னை மரத்தின் நன்மைகளைக் கூறு.

5. வாழைக்கன்று என்றால் என்ன?

II. **கீழே வரும் சொற்களுக்கு அதே பொருளுடைய வேறு சொற்களை எழுது :**

பழம், உபயோகம், முதிர்ந்த, ஆசையாக.

III. **அடியில் வரும் சொற்களுக்கு எதிர்ப்பதங்கள் கூறு:**

பல, சிறிய, பழம், நன்மை.

IV. **இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :**

குலை குலையாக, செழிப்பாக, ஆவலாக, இனிப்பாக, முடைந்து.

V. **அடியில் வருவனவற்றில் இனத்தைச் சேராத சொல்லை மட்டும் தனியாக எடுத்து எழுது :**

1. இலை, கிளை, கண்ணாடி, தண்டு, மலர்.
2. புத்தகம், பேனா, பென்சில், பானை, பலகை.
3. நாற்காலி, மேஜை, பசு, முக்காலி, பெஞ்சு.
4. பூனை, நாய், பசு, காக்கை, குதிரை.

## 23. பாலனும் வேலனும்

[பாலனும் வேலனும் பள்ளித் தோழர்கள். பாலன், வேலன் வீட்டிற்கு வந்தான்.]

**பாலன் :— வணக்கம் வேலா! மூன்று நாட்களாக நீ பள்ளிக்கூடத்துக்கு வரவில்லையே! எங்கே போயிருந்தாய்?**

**வேலன் :— பாலா! மூன்று நாட்களாக எனக்குக் காய்ச்சல். அதனால் பள்ளிக்கூடம் வரவில்லை!**

**பாலன் :— அப்படியா? இப்போது காய்ச்சல் எப்படி இருக்கிறது?**

**வேலன் :— இப்போது சிறிது குணமடைந்து இருக்கிறேன். நாளைக்குப் பள்ளிக் கூடம் வரலாம் என்று நினைக்கிறேன்.**

**பாலன் :— மருந்து சாப்பிடுகிறாயா? ஆகாரம் என்ன?**

**வேலன் :— மருந்து சாப்பிட்டுக்கொண்டு தான் வருகிறேன். கஞ்சிதான் குடிக்கிறேன்.**

**பாலன் :— வேலா! உடம்பை நன்றாகக் கவனித்துக்கொள். நான் ஆசிரியரிடம் உன் உடல்நிலை பற்றிக் கூறுகிறேன்.**

வேலன் :— பாலா! வீட்டில் படுத்துக் கொண்டே இருப்பது எனக்குப் பிடிக்கவில்லே. நாளே எப்படியாவது பள்ளிக்கூடத்துக்கு வரப்போகிறேன்.

பாலன் :— வேண்டாம் வேலா! உடம்பு முற்றிலும் குணமாகும் வரையில் வரவேண்டாம். நீ வராத நாட்களில் பள்ளிக் கூடத்தில் நடப்பவைகளே நான் வந்து உனக்குக் கூறுகிறேன்.

வேலன் :— நல்லது பாலா! தினமும் மாலேயில் இங்கு வந்து போ. பள்ளிக்கூடத்தில் நடக்கிறவைகளே எனக்குச் சொல்ல வேண்டும்.

பாலன் :— வேலா! ஒன்று கூற மறந்து விட்டேனே!

வேலன் :— என்ன அது ?

பாலன் :—அடுத்த வாரம் நமது பாடசாலே ஆண்டு விழா நடக்கப் போகிறது.

வேலன் :— ஆண்டு விழாவில் என்னென்ன நடக்கும் ?

பாலன் :— படிப்பிலும் விளேயாட்டிலும் சிறந்த மாணவர்களுக்குப் பரிசுகள் கொடுக்கப் போகிருர்கள்.

வேலன் :—அன்று யார் யார் வருவார்கள்?

பாலன் :— அன்று நமது கல்வியதிகாரி வரப்போகிருர். அவர் வெற்றிபெற்ற மாணவர் களுக்குப் பரிசுகளே வழங்குவார்.

வேலன் :— பாலா ! உனக்கும் பரிசுகள் கிடைக்கலாம் என்று நிீனக்கிறேன்.

பாலன் :— ஓட்டப் பந்தயத்தில் எனக்கு முதற்பரிசு கிடைக்கலாம் என்று எதிர்பார்க் கிறேன். உனக்கும் படிப்பில் பரிசு கிடைக்கும்.

வேலன் :— சரி, பாலா ! தினமும் ஓடிப் பயிற்சி செய். நீ நிச்சயமாகப் பரிசுபெறுவாய்.

பாலன் :— வேலா ! உடம்பு குணமாகி நீயும் ஆண்டு விழாவில் கலந்து கொள்ள வேண்டுமென ஆண்டவனே வேண்டு கின்றேன்.

வேலன் :— மணி ஒன்பது ஆகிறதே ! நீ பள்ளிக்கூடம் போக வேண்டாமா?

பாலன் :— ஆமாம். நேரமாகிவிட்டது. போய் வருகிறேன். வணக்கம்.

வேலன் :— வணக்கம்.

[பாலன் போகிருன்.]

## சொற்கள்

| | | |
|---|---|---|
| வணக்கம் | ஆசிரியர் | பந்தயம் |
| காய்ச்சல் | பிடிக்கவில்லை | மாணவர் |
| குணமடைந்து | மறந்து | பரிசு |
| மருந்து | வாரம் | நிச்சயமாக |
| கஞ்சி | ஆண்டு விழா | பெறுவாய் |
| கவனித்து | கல்வியதிகாரி | வழங்குவார் |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. வேலன் மூன்று நாட்களாக ஏன் பள்ளிக்கூடம் போகவில்லை?
2. பாலன் பள்ளிக்கூடத்தில் ஒரு வாரத்தில் என்ன நடக்கப் போவதாகச் சொன்னான்?
3. பாலன் தனக்கு எதில் பரிசு கிடைக்கும் என்று கூறினான் ?

II. **ஆண்பாற் சொற்களைப் பெண்பாற் சொற்களாகவும், பெண்பாற் சொற்களை ஆண்பாற் சொற்களாகவும் மாற்றி எழுது :**

1. ஓர் ஊரில் ஒரு சிறுவன் இருந்தான்.
2. என் தம்பி கடைக்குச் சென்றான்.
3. அவன் தாத்தா வெளியூரில் இருக்கிறார்.
4. அவன் ஒரு மாணவன்.
5. என் மாமா ஒரு கதைப் புத்தகம் கொடுத்தார்.

III. **கீழ்வரும் வாக்கியங்களைக் கவனி :**

1. இராமன் கடைக்குச் சென்றான்.
2. பூனை எலியைக் கொன்றது.
3. காந்தியடிகள் இந்தியாவின் விடுதலைக்குப் பாடு பட்டார்.

ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவிலும் ஒரு புள்ளி இட்டிருப்பதைப் பாருங்கள். இவ் வாக்கியங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கருத்து முற்றுப் பெற்றுள்ளது. ஒவ்வொரு வாக்கியத்திலும் ஒவ்வொரு கருத்து முற்றுப் பெற்றிருக்கிறது என்பதைக் காட்டுவதற்காக வாக்கியத்தின் முடிவில் ஒரு புள்ளி வைக்க வேண்டும். இதற்கு **முற்றுப்புள்ளி** என்று பெயர். **( . இது முற்றுப்புள்ளி. )**

1. உன் பெயர் என்ன ?
2. கண்ணன் எங்கே போனான் ?

இவ்வாறு வினாப்பொருளை உடைய வாக்கியங்களுக்கு முடிவில் **கேள்விக்குறி** இடவேண்டும். **( ? இது கேள்விக்குறி. )**

IV. **கீழ்வரும் வாக்கியங்களில் பொருத்தமான இடங்களில் முற்றுப்புள்ளியும் கேள்விக்குறியும் இடு :**

1. கலைவாணி புத்தகம் வாங்கினாள்
2. பாரி பள்ளிக்கூடத்துக்குச் சென்றான்
3. உன் வயது என்ன
4. வெண்ணெய் எங்கே கிடைக்கும்
5. இதைப் படித்தவன் யார்
6. முருகன் என்னை அழைத்தான்



## 24. அன்புத் தாத்தா

நாம் வாழும் நாட்டுக்கு இந்தியா என்று பெயர். இந்தியாவை நாம் நமது தாய் நாடு என்று கூறுகிறோம். சில ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டை வெள்ளைக்காரர்கள் ஆண்டு வந்தார்கள். இப்போது நம்மவர்களே நம்மை ஆண்டு வருகிறார்கள். நாம் சுதந்தரமாக வாழ்ந்து வருகிறோம்.

நம் நாட்டின் விடுதலைக்கு மிகவும் பாடு பட்டவர் மகாத்மா காந்தி ஆவர். அவர் பம்பாய் மாகாணத்தில் பிறந்தார். படிப்பில் ஊக்கமாக

இருந்து பட்டம் பெற்று வக்கீல் வேலையை நடத்தி வந்தார். அவர் தமது தொழிலில் மிகவும் திறமை உடையவராக விளங்கினார்.

ஒரு சமயம் மகாத்மா காந்தி ஒரு வழக்கை நடத்துவதற்காகத் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றார். அது இந்தியாவுக்குத் தென் மேற்கில் இருக்கிறது. அங்கே பல இந்தியர்கள் கூலி வேலை செய்து பிழைத்து வந்தார்கள். வெள்ளையர்கள் அவர்களை மிகவும் துன்பப் படுத்தினார்கள். காந்தியண்ணல் அவர்கள் துன்பத்தைப் போக்க மிகவும் பாடுபட்டார்.

தென்னாப்பிரிக்காவில் ஒரு நாள் காந்தி அண்ணல் ஒரு புகை வண்டி நிலையத்தில் நின்று கொண்டிருந்தார். அவர், பக்கத்தில் இருக்கும் ஓர் ஊருக்குப் புறப்பட்டார். அவர் மூன்றாம் வகுப்பு டிக்கட்டு வாங்கிக் கொண்டு வண்டியில் ஏறச் சென்றார். அவர் ஏறுவதற்கு முன் ஓர் ஐரோப்பியர் முதல் வகுப்பு வண்டியில் ஏற முயன்றார். அந்த ஐரோப்பியரிடம் அவருடைய படுக்கையும் பெட்டியும் இருந்தன. அவற்றை அவர் வண்டியில் தூக்கி வைத்தால் தமது பெருமை குறைந்து விடும் என்று எண்ணினார். அதனால்

கூலிக்காரன் ஒருவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

கூலிக்காரன் ஒருவனும் அங்கு வரவில்லை. வண்டி புறப்படும் நேரம் நெருங்கி விட்டது. ஐரோப்பியர் ஒன்றும் தோன்றாமல் திகைத்தார். அவர் நிலையைக் கண்ட நமது காந்தி அவரிடம் விரைந்து சென்றார்; அவருடைய படுக்கையையும் பெட்டியையும் தாமே தூக்கி வண்டியில் வைத்தார்.

மகாத்மா காந்தியே கூலியாளாக வந்தார் என்று அந்த ஐரோப்பியருக்குத் தெரியாது. அவர் செய்த உதவிக்காக ஐரோப்பியர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். அவர் ஒரு ரூபாயை எடுத்துக் காந்தியிடம் கொடுத்தார். மகாத்மா அதை வாங்க மறுத்தார். கூலி போதாது என்று நினைத்து அவர் மறுப்பதாக ஐரோப்பியர் நினைத்தார்; அதனால் இரண்டு ரூபாய்கள் எடுத்துக் கொடுத்தார். மகாத்மா அதையும் வாங்க வில்லை. பின்னர் ஐரோப்பியர் மூன்று ரூபாய்களை நீட்டினார். காந்தியோ அதையும் வாங்க மறுத்தார்.

ஐரோப்பியருக்கு மிகுந்த கோபம் உண்டா யிற்று. அவர், 'இன்னும் எவ்வளவுதான் கொடுக்க வேண்டும்?' என்று கூறிக் கூலி யாளாக வந்த காந்தியண்ணலின் கன்னத்தில்

'பளீர்' என்று ஓங்கி அறைந்தார். அதனால் காந்தி அடிகள் வருத்த மடைந்தாரா ? அவர் ஒரு சிறிதும் வருந்தவில்லை. அந்த ஐரோப்பியரின் அறியாமையைக் கண்டு பரிதாபம் கொண்டார். அவர் ஒன்றும் பேசாமல் மூன்றும் வகுப்பு வண்டியில் ஏறி அமர்ந்தார். வண்டி புறப்பட்டது.

இவ்வாறு நம் காந்தித் தாத்தா எல்லோரிடமும் அன்பாகவே இருந்தார். தீமை செய்தவரிடமும் அன்பு காட்டினார். அவர் எப்பொழுதும் இனிய மொழியே பேசுவார். யாருடைய மனமும் புண்படும்படி அவர் நடக்க மாட்டார். அன்பு நெறியினாலேயே அவர் நமது நாட்டின் விடுதலையைப் பெற்றார். அவர் உலகம் புகழும் உத்தமராக விளங்கினார்.

### சொற்கள்

| | | |
|---|---|---|
| வாழும் | ஊக்கமாக | பிழைத்து |
| தேசத்திற்கு | தொழிலில் | பரிதாபம் |
| தாய்நாடு | திறமை | ஐரோப்பியர் |
| ஆண்டுகளுக்கு | சமயம் | படுக்கை |
| நம்மவர் | வழக்கை | எதிர்பார்த்து |
| சுதந்தரமாக | தென்னாப்பிரிக்கா | தோன்றாமல் |
| பாடுபட்டவர் | தென்மேற்கில் | திகைத்தார் |
| அறியாமை | சேவை | விரைந்து |
| விடுதலை | அன்புநெறி | மறுத்தார் |

## பயிற்சி

I. **விடை கூறு :**

1. நம் தாய்நாடு எது ?
2. நமது தேசத்தின் விடுதலைக்கு மிகவும் பாடு பட்டவர் யார் ?
3. ஒரு சமயம் மகாத்மா காந்தி எங்கே புறப்பட்டார் ?
4. ஐரோப்பியர் காந்தி அண்ணலிடம் கோபம் கொள்ளக் காரணம் என்ன ?

II. **கீழ் வருவனவற்றை உன் சொந்த வாக்கியங் களில் அமைத்து எழுது :**

பளீர் என்று, வழக்கை, திறமை, திரளான, சுதந்தரமாக, தாய்நாடு.

III. **தெரிந்துகொள் :**

தமிழ் எழுத்துக்கள், **(1) உயிர் எழுத்து, (2) மெய் எழுத்து, (3) உயிர்மெய் யெழுத்து**, (4) **ஆய்த எழுத்து** என நான்கு வகைப்படும். உயிர் எழுத்துக்கள் : **அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ** எனப் பன்னிரண்டாகும். மெய்யெழுத்துக்கள் : **க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்** எனப் பதினெட்டு ஆகும். உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டும் மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் **க்+அ=க** என்பது போலச் சேர்ந்து உயிர்மெய் எழுத்துக்கள் **216** ஆகும். **ஃ** என்பது ஆய்த எழுத்து. ஆக மொத்தம் தமிழ் எழுத்துக்கள் **247.** இவற்றின் அட்டவணையை இந்தப் புத்தகத்தின் கடைசிப் பக்கத்தில் பாருங்கள்.



## 25. துப்பாக்கியைத் தொடமாட்டேன்

ஜவஹர் ஒருநாள் வேட்டைக்குத்
தனியே கிளம்பிச் சென்றனரே.
அவரது கையில் துப்பாக்கி
ஆயுத மாக இருந்ததுவே. 1

குட்டி மான்ஒன் றவர்முன்னே
குதித்து ஓடி வந்ததுவே.
சுட்டார் ஜவஹர். உடனேயே,
துடித்துக் கொண்டே அம்மானும், 2

வந்து ஜவஹர் காலடியில்
மயங்கி வீழ லானதுவே !
அந்தக் காட்சி ஜவஹரையே
அதிகம் கலக்கி விட்டதுவே. 3

“எவர்க்கும் கெடுதி செய்தறியேன்
என்னைச் சுடுவது சரியாமோ?”
ஜவஹரைப் பார்த்துக் கேட்பதுபோல்
தரையில் கிடந்தது, மான்குட்டி. 4

கண்ணீர் சொரியும் மான்அதனைக்
கண்டார் ஜவஹர். கண்டதுமே
புண்ணாய்ப் போனது அவர்மனமும்.
கண்ணீர் விட்டார் அக்கணமே. 5

“துப்பாக் கியைநான் இனிமேலே
தொடவே மாட்டேன். சத்தியமே”
இப்படி உடனே கூறினரே.
இதுவரை சொல்லைக் காத்தனரே. 6

—குழந்தைக் கவிஞர். அழ. வள்ளியப்பா

சொற்கள்

| | | |
|---|---|---|
| வேட்டை | சுட்டார் | கலக்கி |
| தனியே | துடித்து | கெடுதி |
| கிளம்பி | காலடி | சத்தியம் |
| துப்பாக்கி | மயங்கி | காத்தனர் |
| ஆயுதம் | வீழலானது | காட்சி |
| சொரியும் | அக்கணம் | கூறினர் |

## பயிற்சி

**I. விடை கூறு :**

1. ஜவஹர் ஒரு நாள் எங்கே சென்றார் ?
2. அவர் துப்பாக்கியால் எதைச் சுட்டார் ?
3. மான்குட்டி என்ன கேட்பது போல் கிடந்தது ?
4. ஜவஹர் ஏன் கண்ணீர் விட்டார் ?
5. அவர் செய்த சத்தியம் யாது ?

**II. எதிர்ப்பதம் கூறு :**

சென்றனர், முன்னே, கெடுதி, சத்தியம்.

**III. வாக்கியங்களில் சேர்த்து எழுது :**

கிளம்பி, குதித்து, காலடியில், சரியாமோ, இனிமேல்.

---



## 26. நான்கு பாடகர்கள்

ஒரு வண்ணான் ஒரு கழுதையை வளர்த்து வந்தான். அது பல வருஷங்களாக அவனிடம் உழைத்து வந்தது. அதனால் அது கிழமாகி விட்டது. கிழமான கழுதையை வண்ணான் வீட்டைவிட்டுத் துரத்தி விட்டான்.

அந்தக் கழுதை வெளியூருக்குப் புறப் பட்டது. அது வழியில் ஒரு நாயைப் பார்த்தது. அந்த நாய் மிகவும் இளைத்துப் பெருமூச்சு விட்டுக்கொண் டிருந்தது. கழுதை, நாயைப் பார்த்து, "நண்பா! உன் உடம்பு

சுக மில்லையா? ஏன் இப்படிப் பெருமூச்சு விடுகிறுய்?'' என்று கேட்டது. அதற்கு நாய், '' அண்ணு கழுதையாரே ! நான் என்ன செய்வேன் ? நானே கிழவனுகி விட்டேன். இந்தக் கிழப் பருவத்தில் என்னுல் ஓடி ஆடி வேட்டை பிடிக்க முடியவில்லை. நான் முன் போல் வேலை செய்யாததால் என் எசமானன் என்னை விரும்பவில்லை. என் பசி வேளைக்குத் தீனியும் கொடுப்பதில்லை. அவன் என்னைக் கொல்லவும் எண்ணினுன். அதை அறிந்து நான் வீட்டை விட்டு வெளியே ஓடிவந்து விட்டேன். இனி நான் எப்படி வாழ்வேன் ?'' என்று சொன்னது.

கழுதை, '' தம்பி! கவலை வேண்டாம். என்னோடு வா. நாம் இருவரும் வெளியூருக்குப் போய்ப் பாட்டுப் பாடிப் பிழைக்கலாம்" என்றது. நாய், " அப்படியே செய்யலாம் " என்று கூறிப் புறப்பட்டது. கழுதையும் நாயும் திங்களூர் என்னும் ஊரை நோக்கிச் சென்றன.

அவை வழியில் ஒரு கிழப் பூனையைச் சந்தித்தன. அந்தக் கிழப் பூனையைப் பார்த்த நாய், " பூனையாரே, பூனையாரே ! ஏன் வாட்டமாக இருக்கிறீர் ?'' என்று கேட்டது.

அதற்குப் பூனை, "நண்பர்களே! நானும் கிழவனாக இருக்கிறேன். என்னால் முன்போல் எலியைப் பிடிக்க முடியாததால் எசமானி என்னை வீட்டைவிட்டு விரட்டி விட்டாள். நானும் உங்களுடன் வருகிறேன். தயவு செய்து என்னையும் அழைத்துக் கொண்டு போங்கள்" என்று வேண்டியது. கழுதையும் நாயும் பூனையும் திங்களூருக்குப் புறப்பட்டன.

சிறிது தூரம் சென்றதும், அவை மூன்றும் ஒரு சேவலைப் பார்த்தன. அந்தச் சேவல் வருத்தத்துடன் உரக்கக் கூவிக் கொண்டே இருந்தது. கழுதை, "சேவலே, சேவலே! ஏன் இப்படிக் கூச்சல் இடுகிறாய்?" என்று கேட்டது. சேவல், "அண்ணா! என் எசமானன் இன்று இரவு என்னைக் கொன்று கறி சமைக்கப் போகிறானாம்! ஐயோ! நான் என்ன செய்வேன்!" என்று கூவிற்று. அதற்குக் கழுதை, "சேவலே! நாங்கள் திங்களூரில் பாட்டுப் பாடப் போகிறோம். நீயும் எங்களுடன் வா. நால்வருமாகச் சேர்ந்து பாடினால் நன்றாக இருக்கும்" என்று சொன்னது. சேவலும் அதற்கு ஒப்புக் கொண்டது. நான்கும் திங்களூரை நோக்கிப் போயின.

அவை நான்கும் திங்களூரை அடை வதற்கு முன் வழியில் இருட்டிவிட்டது. அவை அங்கே ஒரு வீட்டைக் கண்டன. அந்த வீடு ஒரு பெரிய வீடு. அங்கு ஏராளமாக உணவுப் பொருள்கள் கிடைக்கும் என்று அவை நினைத்தன. அந்த வீட்டுக்காரர் ஊரில் இல்லாததால் சில திருடர்கள் அங்கே வந்திருந்தார்கள்.

கழுதை அந்த வீட்டி லிருந்த சன்னலின் வழியாக உள்ளே எட்டிப் பார்த்தது. வீட்டின் அறைகளில் உணவுப் பண்டங்கள் நிறைய இருந்தன. ஓரிடத்தில் திருடர் சிற்றுண்டி சாப்பிட்டுக்கொண் டிருந்தனர். அதைப் பார்த்த கழுதைக்கு நாக்கில் நீர் சுரந்தது.

நான்கும் ஒரு யோசனை செய்தன. கழுதை தன் பின்னங் கால்களைத் தரையில் ஊன்றிக் கொண்டு முன்னங் கால்களைச் சன்னலின் மேல் வைத்துக் கொண்டது; நாய் கழுதை முதுகின்மேல் ஏறிக் கொண்டது; பூனை நாயின் முதுகில் நின்றது; சேவல் பூனையின் தலைமேல் ஏறிக் கொண்டது; இவ்வாறு நான்கும் நின்றவுடன் பாட்டுப் பாட ஆரம்பித்தன. கழுதை உரக்கக் கத்திற்று; நாய், ‘வள், வள்’ என்று குரைத்தது; பூனை,

'மியாவ் மியாவ்' என்று கத்தியது; சேவல், 'கொக்கர கோ' என்று கூவிற்று. நான்கும் கத்திய பெருங் கூச்சலைக் கேட்டு உள்ளே இருந்த திருடர்கள் பயந்தார்கள். அவர்கள் ஒன்றும் புரியாமல் வெளியே ஓடிவிட்டார்கள்.

பிறகு அந்த நான்கு பாடகர்களும் வீட்டினுள் நுழைந்தார்கள். வீட்டில் இருந்த உணவுப் பொருள்களை வயிறு புடைக்கத் தின்றார்கள். சில நாட்கள் அங்கேயே இருந்து களிப்புடன் வாழ்ந்தார்கள்.

### சொற்கள்

| | | |
|---|---|---|
| வருஷங்கள் | பெருமூச்சு | விரட்டி |
| உழைத்து | சுகம் | கொன்று |
| துரத்தி | பருவத்தில் | கறி |
| ஒப்புக்கொண்டது | புடைக்க | நினைத்தன |
| கூச்சல் | கவலை | சுரந்தது |
| இளைத்து | சந்தித்தன | களிப்புடன் |

### பயிற்சி

I. **விடை கூறு:**

1. வண்ணான் கழுதையை ஏன் விரட்டினான்?
2. நாய் வீட்டைவிட்டு வெளியேறக் காரணம் என்ன?
3. பூனை ஏன் வெளியில் ஓடிவிட்டது?
4. சேவல் வெளியே செல்லக் காரணம் யாது?
5. கழுதை, நாய் முதலியவைகளுக்கு எவ்வாறு உணவுப் பொருள் கிடைத்தது?

# 27. கைத்தொழில்

கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள் ;
கவலை உனக்கிலை ஒத்துக்கொள் ;
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருந்திடல் உனக்கே சரியாமோ ?

உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் நடவாது ;
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ ?

நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்திடுவார் ?
குசவன் செய்திடும் பாண்டமன்றோ
குடித்தனம் நடத்திட வேண்டுமென்றும் ?

—நாமக்கல் கவிஞர்

## சொற்கள்

| | | |
|---|---|---|
| கைத்தொழில் | உழவு | விருந்து |
| கவலை | நடவாது | கலை |
| குடித்தனம் | விழவு | இன்பம் |

**விடை கூறு :**

1. ஒவ்வொருவரும் ஏன் ஒரு கைத்தொழிலைக் கற்க வேண்டும் ?
2. உனக்கு விருப்பமான கைத்தொழில் எது ?
3. உங்கள் ஊரில் நடக்கும் கைத்தொழில்கள் யாவை?

# 28. ஆத்தி சூடி

1. அறம்செய விரும்பு.
2. ஆறுவது சினம்.
3. இளமையில் கல்.
4. ஈவது விலக்கேல்.
5. ஊக்கமது கைவிடேல்.
6. எண் எழுத்து இகழேல்.
7. ஏற்பது இகழ்ச்சி.
8. ஐயம்இட்டு உண்.
9. ஒதுவது ஒழியேல்.
10. கண்டொன்று சொல்லேல்.
11. கூடிப் பிரியேல்.
12. கேள்வி முயல்.
13. செய்வன திருந்தச்செய்.
14. நன்மை கடைப்பிடி.
15. நோய்க்கு இடம்கொடேல்.
16. மீதூண் விரும்பேல்.
17. மூர்க்கரோடு இணங்கேல்.
18. வல்லமை பேசேல்.
19. வெட்டெனப் பேசேல்.
20. வைகறைத் துயில் எழு.

— ஔவையார்

## பொருள் விளக்கம்

1. அறம் - தருமம். 2. ஆறுவது - தணிவது; சினம் - கோபம். 3. இளமையில் - சிறுவயதில்; கல் - படி. 4. ஈவது - கொடுப்பதை; விலக்கேல் - தடுக்காதே. 5. ஊக்கமது - முயற்சியை; கைவிடேல் - விட்டுவிடாதே. 6. எண் - கணக்கையும்; இகழேல் - இகழாதே. 7. ஏற்பது - யாசிப்பது. 8. ஐயம் - பிச்சை; இட்டு - பிறருக்கு இட்டு. 9. ஒதுவது - படிப்பதை. 11. கூடி - நட்புச்செய்து. 12. கேள்வி - பெரியோர் சொல்லைக் கேட்டல். 13. செய்வன - செய்யும் வேலைகளை; திருந்த-செம்மையாக. 14. கடைப்பிடி - விடாதுசெய். 15. நோய்க்கு - நோய் வருவதற்கு. 16. மீதூண் - அளவுமீறி உண்பதை. 17. மூர்க்கரோடு - கெட்டவர்களோடு. 18. வல்லமை-பெருமை. 19. வெட்டென - கடுமையாக. 20. வைகறை - அதிகாலையில்.

---

# 29. கொன்றை வேந்தன்

1. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
2. ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
3. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
4. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
5. எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
6. கீழோர் ஆயினும் தாழ உரை.
7. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை.
8. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
9. சூதும் வாதும் வேதனை செய்யும்.
10. தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை.
11. தாயில் சிறந்தொரு கோயிலும் இல்லை.
12. திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.
13. தீராக் கோபம் போராய் முடியும்.
14. தொழுதூண்சுவையின் உழுதூண் இனிது.
15. நுண்ணிய கருமம் எண்ணித் துணி.
16. பாலோடு ஆயினும் காலம் அறிந்து உண்.
17. மருந்தே ஆயினும் விருந்தோடு உண்.
18. முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
19. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.
20. ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.

—ஔவையார்

## பொருள் விளக்கம்

1. முன்அறி - முதன் முதலில் தெரிந்துகொள்ளக் கூடிய. 2. ஆலயம் - கோயில்; சாலவும் - மிகவும். 3. தேட்டை - செல்வம்; தீயார் - கெட்டவர். 4. ஊருடன் - ஊரில் உள்ளவருடன்; வேருடன் - அடியோடு. 5. எண் - கணக்கு. 6. கீழோர் - இழிந்தோர்; தாழ - வணக்கமாக. 7. சுற்றம் - உறவினர். 8. சீரை - சிறப்பை; ஏரை - உழவுத்தொழிலை. 9. வேதனை - துன்பம்; 10. மிக்க - உயர்ந்த. 11. சிறந்த - மேம்பட்ட. 12. திரைகடல் - அலைகளையுடைய கடல்; திரவியம் - செல்வம்; தேடு - சம்பாதி. 13. தீரா - தணியாத; போராய் - சண்டையாக. 14. தொழுதூண் சுவை - ஒருவரை வணங்கிக் கூலி பெற்றுச் சாப்பிடும் சுகம்; உழுதூண் - உழவுத் தொழிலைச் செய்து உண்பது. 15. நுண்ணிய கருமம் - மிகச் சிறு வேலை; எண்ணி - ஆராய்ந்து; துணி - செய்ய முற்படு. 16. பாலோடு - பாலோடு சேர்ந்த உணவு. 17. மருந்து - தேவாமிர்தம். 18. முற்பகல் - முன்னே; பிற்பகல் - பின்னே. 19. மூத்தோர் - பெரியோர். 20. ஊக்கம் - முயற்சி; ஆக்கம் - செல்வம்.

---

# 30. செந்தமிழ் நாடு

செந்தமிழ் நாடெனும் போதினிலே - இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே - எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே - ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே. 1

கல்வி சிறந்த தமிழ்நாடு - புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு - நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின் - மணம்
பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு. 2

வள்ளுவன் தன்னை உலகினுக்கே - தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு - நெஞ்சை
அள்ளும் சிலப்பதிகார மென்றோர் - மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு. 3

—பாரதியார்

### பொருள் விளக்கம்

சக்தி - உணர்ச்சி. பல் விதமாயின - பல வகையான. மணம் - புகழ். பார் - உலகம். வள்ளுவன் - திருவள்ளுவர். வான்புகழ் - உயர்ந்த புகழ். நெஞ்சை - மனத்தை. ஆரம் - மாலை. படைத்த - பெற்ற.

## அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்



என்னையிவ் வுலகில் பெற்றே
இன்னுயிர் போலக் காக்கும்
அன்னையே அப்பா உங்கள்
அடியிணை வணங்கு வேனே!